# சரித்திரத்தின் பிரசவிப்பில் சாய்ந்துபோன கோபுரம்

தாண்டு போயிருந்த
தமிழன் உரிமைகளை
தோண்டி எடுக்க
துப்பாக்கி எடுத்தவளே
அதிகாலை ஒன்றிற்காய்
அஸ்தமித்த வேளையில்
உலகத்தின் உள்ளத்தில்
உதயமாகி விட்டாய்.

சோதியா .....
சரித்திரத்தின் பிரசவிப்பில்
சாய்ந்து போன கோபுரம்
சரிந்து கிடந்த சந்ததியை
நிமிரச் செய்த
செம்பு கோல்.

இவளின்
உயிரற்ற உடலை
உள்ளே வைத்திருப்பதால்
காலந் தோறும்
கல்லறை ஒன்று
கௌரவிக்கப் படுகிறது.

சரித்திரத்தில் உன்சாவு
சகிக்க முடியாததுதான்
ஆனாலும்
சமாளித்துக் கொண்டோம்.
விடியலைத் தடுத்த
வேலிகளைப் பிரிப்போம்.
உரிமைகளைப் பறித்து
உணர்வுகளைச் சிதைக்கவரும்
ஆதிக்கக் கரங்களை
அக்கினியில் கொழுத்துவோம்.

இறப்புக்கள் தொடர்ந்து
இதயம் வருந்தினாலும்
இலக்கை நோக்கியே
கால்கள் விரையும்
கரங்கள் உயரும்.

இரத்தம் வடிந்தாலும்
எங்கள் முகங்கள்
வேதனைத் தீயில் வேகாமல்
வெற்றிக் களிப்பால்
சிவப்பாகட்டும்.

உங்களுடன் ஒரு வார்த்தை...

# காலத்தின் தேவை

27-05-1990 முதல் 29-05-1990 வரை யாழ். வின்ஸர் திரையரங்கில் விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியின் மாநாடு நடைபெற்றது.

தேச விடுதலையுடன் கூடிய பெண்களின் விடுதலையை வென்றெடுப்பதற்காக அமைக்கப்படும் மகளிர் அமைப்பு ஒன்றிற்கான மாநாடு தமிழீழத்தில் நடைபெறுவது இதுவே முதற்தடவை.

எனவே, வரலாற்றிலேயே முதற்தடவையாக தமிழீழத்தின் சகல பகுதிகளிலுமுள்ள பெண்களின் பிரதிநிதிகள் இம் மாநாட்டில் கலந்து கொண்டனர்.

இம் மாநாட்டில் விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியின் யாப்பு வாசிக்கப்பட்டு சில திருத்தங்களுடன் ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

முன்னணியின் வேலைத் திட்டங்கள் பற்றிய தீர்மானம் நிறைவேற்றப்படும் போது ஒவ்வொரு மாவட்டத்திலுமிருந்து வந்திருந்த பிரதிநிதிகள் தத்தம் மாவட்டத்தின் குறைபாடுகளை விளக்கிக் கூறினர். வாதப் பிரதிவாதங்களும் நடைபெற்றன. இதன் வாயிலாக தமிழீழம் வாழ் அனைத்து தமிழ், முஸ்லீம் பெண்களும் சந்திக்கின்ற பொதுவான பிரச்சனைகள் வெளிக் கொணரப்பட்டன. தேசிய விடுதலைப் போராட்டத்தில் பெண்கள் இணைந்து கொள்வதால் பெண்கள் எதிர்நோக்க வேண்டியுள்ள பிரச்சனைகள், பாதிப்புகள் என்பன பற்றியும், தேசிய விடுதலையுடன் கூடிய பெண் விடுதலையை எவ்வாறு வென்றெடுப்பது என்பன பற்றியும் இங்கு ஆராயப்பட்டது. இவற்றினைத் தீர்க்கும் வகையில் வேலைத் திட்டங்கள் தீட்டப்பட்டன.

விடுதலைப் புலிகள் மக்கள் முன்னணி தனக்கென ஒரு சின்னத்தைக் கொண்டிருந்த போதும் அதன் துணை அமைப்பாக செயற்படுகின்ற மகளிர் முன்னணி தேசிய ஒடுக்குமுறைக்கு எதிராக மட்டுமல்லாது சிறப்பாக பெண்களின் விடுதலைக்காகவும் போராட வேண்டிய ஒரு அமைப்பாக உள்ளதனால் தேசிய விடுதலையுடன் கூடிய பெண் விடுதலையை பிரதிபலிக்கும்வகையில் தனியான ஒரு சின்னம் அமைப்பது அவசியம் என வலியுறுத்தப்பட்டது அதற்கென பலமாதிரி வடிவங்கள் சபையோரால் சமர்ப்பிக்கப்பட்டன. பெண்ணினம் எதிர்நோக்கியுள்ள அடக்குமுறை வடிவங்கள் பற்றியும் அவற்றிலிருந்து விடுபடும் வழிவகைகள் பற்றியும் கருத்துக்கள் பரிமாறப்பட்டன. இறுதியாக தேசிய பிரச்சினை தொடர்பான தீர்மானங்களும் பெண்களின் பிரச்சனைகள் சம்பந்தமான தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டதுடன் மூன்றும் நாள் மாநாடு நிறைவு பெற்றது.

காலங்காலமாகப் பெண்கள் ஆண்களைச் சார்ந்து தான் இருக்க வேண்டும். ஆண்களின் கட்டுப்பாட்டினுள் அடங்கி வெளியுலகம் தெரியாது வெறுமனே பிள்ளை பெறும் இயந்திரமாகவும், போகப் பொருளாகவும் குறைந்த செலவில் நிறைந்த வேலை செய்யும் ஓர் எந்திரமாகவும், கவர்ச்சிப் பொருளாகவும் மட்டுமே சமுதாயத்தினால் கருதப்பட்டு வந்த மனோபாவத்தில் இன்று ஓரளவு மாற்றம் ஏற்பட்டுள்ளது.

பெண்ணினம், தாம் அடக்கு முறைக்கு உள்ளாக்கப்பட்டிருக்கின்றோம் என்பதை உணரத் தொடங்கிவிட்டது. பெண்கள் சமுதாயத்தில் இரண்டாந்தரப் பிரஜைகளாகக் கருதப்படும் நிலையை மாற்றி கல்வியில், தொழிலில், பிற பணிகளில் எல்லாம் சமத்துவத்திற்காக பெண்கள் குரல் கொடுக்கத் தொடங்கி விட்டார்கள். போராடத் தொடங்கி விட்டார்கள். பெண்கள் தம்முடைய பாதுகாப்பிற்கும், தம்முடைய பிறவேலைகளைப் பூர்த்தி செய்வதற்கும் ஆண்களைச் சார்ந்து நிற்கும் தன்மையை விடுதலைப் புலிகள் மகளிர் அமைப்பிலுள்ள பெண்கள் மாற்றியமைத்து ஏனைய தமிழீழப் பெண்களுக்கு முன்

உதாரணமாகத் திகழ்வது பெண்விடுதலைக் கான போராட்டத்திற்கு ஓர் புதிய உத் வேகத்தினை ஊட்டியுள்ளது.

தேச விடுதலையுடன் பெண்விடுதலை யையும் பெற்றுக் கொள்வதற்காக தமிழ், முஸ்லிம் பெண்கள் ஒன்றிணைந்து போரா டத் தொடங்கியிருக்கும் இவ்வேளையில் விடுதலைப்புலிகள் மக்கள் முன்னணி தனது அடிப்படைக் குறிக்கோள்களில் முக்கியமான தாக பெண்களின் சமத்துவத்திற்காக போராடுவது என்பதைதெளிவாக வலியுறுத் தியுள்ளது. அதனைத் தொடர்ந்து அமைக் கப்பட்ட விடுதலைப்புலிகள் மகளிர் முன் னணி பெண்ணின விடுதலைக்கான தெளி வான குறிக்கோள்களைக் கொண்டிருப்பது டன், அதற்கான சரியான செயற்திட்டங் களையும் வகுத்து நடைமுறைப்படுத்தி வரு கின்றது.

இதன் விளைவாக விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியில் இன்று பெருந் தொகையானோர் இணைந்து கொள்கின்ற னர். பெண் விடுதலைக்கான குரல்கள் ஓங்கி எழுகின்ற இந்நேரத்தில் பெண்களின் விடு தலையை முதன்மைப்படுத்தும் வகையில் மகளிர் முன்னணியின் 1வது மாநாடு நடைபெற்றதானது காலத்தின் தேவை யையே உணர்த்தி நிற்கின்றது. பெண் விடுதலை பற்றி பெண்களுடன் ஆண்களும் ஒன்று கூடி விவாதத்தில் ஈடுபட்ட இம் மாநாடானது பெண்களின் வரலாற்றில் ஒரு பெரிய திருப்புமுனை.

இம் முன்னணியில் இணைந்து செயற் படுவதன் மூலம் பெண்விடுதலையை வென் றெடுக்க முடியும் என்பதில் ஐயமில்லை.

**விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணி மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர் மானங்கள்:-**

1. தமிழீழ மக்களின் தேசிய சுயநிர்ணய உரிமை அங்கீகரிக்கப்படவேண்டும்.

2. தமிழ், முஸ்லிம் மக்களின் தாயக பூமி யின் பூகோள தனித்தன்மையும் ஒருமைப் பாடும் பேணப்பட வேண்டும்.

3. தமிழீழப் பெண்களுக்கெதிரான சகல ஒடுக்குமுறை வடிவங்களும் நீக்கப்படவேண் டும்.

4. தொழிற் துறையிலும், கல்வித்துறை யிலும் பெண்களுக்கெதிராகக் காட்டப்படும் பாரபட்சம் சமத்துவமின்மை நீக்கப்பட வேண்டும்.

5. சீதனம் வழங்கும் முறை ஒழிக்கப்பட வேண்டும்.

6. பொருளாதார தங்கு நிலையில் இருந்து பெண்கள் விடுதலை பெற வேண்டும்.

7. தமிழீழ தாயகத்தில் சிங்களக் குடியேற் றம் உடனடியாக நிறுத்தப்பட வேண்டும்.

8. 1 லட்சம் மலையகம் வாழ் தமிழ் மக் களை நாடுகடத்தும் திட்டம் உடனடியாக நிறுத்தப்பட வேண்டும்.

அவர்களும் மற்றும் இங்கு வாழும் சகல மலையகம்வாழ் மக்களும் இத்தீவின் குடி மக்கள் என்பது ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்

9. மாகாணசபை உடன் கலைக்கப்பட வேண்டும். 6 வது திருத்தச் சட்டம் உட னடியாக நீக்கப்பட வேண்டும்.



## வாசகர்களுக்கு!

தேசத்தின் விடுதலைக்காக, பெண்களின் விடிவிற்காகச் சுதந்திர கீதத்தை இசைத்துவரும் இப்பறவையை அரவணைப் பதும், வளர்த்தெடுப்பதும் உங்கள் கடமை. உங்களுடைய ஆக்கங்களையும், ஆக்கபூர்வமான விமர்சனங்களையும் எதிர் பார்க்கின்றோம்.

# பெண்களின் மீதான சமுதாய அழுத்தம்

— குயில் —

'பெண் நிலை வாதம்' என்ற சொற்றொடரைக் கேட்டவுடனேயே பெண்கள் நடுத்தெருவில் அரைகுறை ஆடையுடன் நிற்பதற்கு அல்லது பல ஆண்களுடன் முறையற்ற உறவுகொள்வதற்கு விரும்புகிறார்கள் என்றொரு தவறான எண்ணம் சிலரிடம் ஏற்பட்டு விடுகிறது. இது அவர்களை மன எழுச்சி கொள்ள வைக்கிறது. "பெண் நிலை வாதம்" பற்றி பேசுகிறார்கள். எதைப் பேசினாலும் சரி அவர்களை எதிர்க்கு மாறு தூண்டுகிறது.

உண்மையில் 'பெண் நிலை வாதம்' தொடர்பான பிரச்சினைகள் வேறு. அவை ஆழமான சில பிரச்சினைகள் எமது சமுதாயத்தில்ஒழுக்கம்,பண்பாடு, கலாச்சாரம் என்பன கட்டாயமும் கடுமையுமாகப் பேணப்பட வேண்டும். குடும்பத்தில் ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்ற நிலை சமுதாயத்தின் ஒழுக்கத்தை பேணுவதற்காக அவசியமாக இருக்க வேண்டும். அத்தகைய உயர்வான எமது மரபுகள் மேற்கத்திய சிந்தனைகளால் எந்த வகையிலும் பாதிக்கப்படக்கூடாது. அதே சமயத்தில் சமுதாயம் பெண்கள்மீது சுற்றியுள்ள அழுத்தங்கள் பற்றி நாம் உரப்பாகச் சிந்திக்க வேண்டும். அவற்றை அகற்ற ஆக்கபூர்வமாகச் செயற்பட வேண்டும்.

எமது குடும்பங்களில் பூரண அமைதி நிலவுகிறது. பெண் நிலை வாதம் பற்றிப் பேசுகிறார்கள். இந்த அமைதியைக் குலைத்துப் பெண்களை ஆண்களுக் கெதிராக ஆயுதம் தூக்குமாறு சொல்லுகிறார்கள் என்பது இன்னும் சிலருடைய எண்ணம். அதுவும் தவறான எண்ணமே!

தென்னாபிரிக்கக் கறுப்பின மக்கள் வெள்ளையரைத் தங்கள் எதிரிகள் என்று கருதுகிறார்கள். தமிழன் மீது வன் முறைகளைக் கட்டவிழ்த்து விட்டபோது, சிங்கள இனவாத அரசை நாங்கள் எங்கள் எதிரியாக இனங்கண்டோம். அவை வித்தியாசமான போராட்டங்கள்! எதிரியை விட்டுப் பிரிந்து நாங்கள் தனியாக வாழ விரும்புகிற போராட்டங்கள். இது அப்படியானதில்லை 'எதிரி' என்ற சொல்லையே இங்கு நாங்கள் பாவிக்க முடியாது.

"பெண்களும் அபிவிருத்தியும், தொடர்பு சாதனங்களும்" என்ற கட்டுரை ஒன்றில் "கமலா பாஸின்" என்ற பெண்மணி "எங்கள் எதிரி மிகப்பாரமான நிலையில் இருக்கிறான்" என்று சொல்லுவார். வேறு பெண்களும் 'எதிரி' என்ற சொல்லைப் பாவிக்கிறார்கள். அப்படிப் பாவித்தாலும் கூட அது ஆண்களை மட்டும்குறிக்காது. பெண்களையும் குறிக்கும். மனித சமுதாயம் வளர்ந்து வந்த பாதையையும் குறிக்கும் மூடநம்பிக்கைகளையும் குறிக்கும் விளக்கமின்மையையும் குறிக்கும் ஆகவே, ஆண்கள் மட்டுமல்ல பெண்நிலை வாதத்தின் எதிரிகள் என்பது மிக முக்கியமான விடயம்.

எப்போதும் ஆண்கள் அமர்ந்துள்ள சபைகளிலேயே பெண் நிலை வாதம்' பற்றிப் பேசப்படுகிறது. "கண்ணனும் அர்ச்சுனனும் செய்கின்ற போர் ஆயத்தங்கள் பற்றித் துரியோதனன் ஆகியோருக்குத் தெரியுமா?" என்று கேட்டுக், கடோற்கசனைத் தூது அனுப்பிய தருமன் காலத்தில் நாங்கள் வாழவில்லை. ஆகவே எதிரிகளை முன்னால் வைத்துக்கொண்டு இந்தப் பிரச்சினையை நாம் அணுகுகிறோம் என்றால் அவர்களை நாம் 'எதிரிகள்' என்று நினைக்கவில்லை என்று தான் பொருள்!

"ஆண்களுக்கு உலகமே வீடு, பெண்களுக்கு வீடே உலகம்" என்ற கருத்து நிலை மிக இறுக்கமாக எமது சமுதாயத்துக்குள்ளே விதைக்கப்பட்டுள்ளது. பெண்களில் பலர் உணர்வு பூர்வமாகத் தமது தாழ்த்தப்பட்ட நிலையை அங்கீகரிக்கின்றனர். இதுதான் எங்கள் பாதையில் உள்ள மிகச் சிக்கலான நிலை. இந்த நிலை நீங்கினால்தான் எமது விடுதலைப் போராட்டத்திலும் பெண்கள் ஆண்களுக்குத் துணையாகத் தோள் கொடுக்க முடியும்.

வீதியில் சென்று கொண்டிருந்த ஒரு பெண் பாலியல் வன்முறைக்குள்ளாக்கப்

படுகிறாள் என்று வைத்துக் கொள்வோம். பத்திரிகையில் அந்தச்செய்தி வரும்போது "கவர்ச்சியான ஆடையுடன் வீதியில் சென்ற பெண் கற்பழிக்கப்பட்டாள்" என்று போடுவார்கள். ஆண் ஒருவன் செய்த மிகப் பாரதூரமான குற்றம் மறைக்கப்பட்டு "கவர்ச்சியான ஆடையுடன் சென்றது அவளது பிழை" என்று நினைக்க வைக்கும் தந்திரமான முறை இது. "அவள் நகை போட்டுக் கொண்டு வந்தாள் ஆகவே தான் களவெடுத்தேன்" என்று வாதிடுவதற்கு ஒப்பான வாதம் இது. ஒரு பெண் கவர்ச்சியான ஆடை அணிவது எமது பண்பாட்டுக்கு ஒவ்வாதது தான் நிச்சயமாக! ஆனால் ... எல்லாத்தவறுகளும் அதனுல் தான் ஏற்படுகின்றன என்று நினைப்பதும் பெண்ணே தண்டிக்கப்படுவதும் ... பிழையான நிலை.

கிளி ஒன்றைக் காட்டும் போதெல்லாம்... கூட்டையும் சேர்த்தே காட்டிக் கொண்டு வந்தால், குழந்தையானது கிளி எப்போதும் கூட்டிலேயே வாழும் என்று நினைக்கும். கூட்டிலே வாழ்வதுதான் அதன் இயல்பு என்றும் நினைக்கும். தொலைக்காட்சி விளம்பரம் ஒன்றிலே மருந்து ஒன்றைச் சிபாரிசு செய்வதற்கு ஒரு வைத்தியர் தேவைப்பட்டால் மறந்தும் ஒரு பெண் வைத்திய நிபுணர் காட்டப்படுவதில்லை. 'நூடில்ஸ்' விளம்பரம், 'விம்' விளம்பரம், 'சவர்க்கார' விளம்பரம் என்றல் அவர்கள் அழகான பெண்களை மறந்து போவதுமில்லை. பெண் என்பவள் சமைக்கவும் வீட்டைப் பராமரிக்கவுமே படைக்கப்பட்டவள் என்ற கருத்தை மிக இயல்பு போலச் சமுதாயத்தில் பதித்து விடுவதில் பொதுஜன தொடர்புச் சாதனங்கள் மிக முக்கிய பங்கு வகிக்கின்றன! தொலைக்காட்சியில் வரும் பெண் எப்போதும் தன்னலம் கருதாத குடும்பத்தலைவியாகவே இருக்க வேண்டுமா? தாய் நாட்டைக் காத்த தனிப்பெரும் வீராங்கனையாக இருக்க முடியாதா?

கிளி கூட்டிலே அமைதியாகத்தான் இருக்கும். கூட்டுக்கு வெளியே வானத்தில் பறந்து திரிவதுதான் கிளியின் இயல்பு என்பது சிலருக்குத் தெரிகிறதே! அதுதான் பிரச்சனை.

ஐரோப்பியர் எங்களை ஆண்டபோது எங்களின் பெரும்பான்மையோர் மிக அமைதியாக இருந்தோம். ஆங்கிலம் படித்தோம். அவர்களின் பண்பாடுகளையும் பின்பற்றினோம். இந்திய அமைதிப்படை இருந்த போதும் நாங்கள் அமைதியாகவே இருந்தோம். ஆகவே 'அமைதி' என்பது எப்போதும் சரியானதில்லை.

குடும்பங்களின் அமைதி குலைக்கப்படக் கூடாது என்பதை ஏற்றுக்கொள்ளோம். ஆனல் தான் கூட்டுக்கு வெளியே வரவேண்டும் என்பது கிளிக்குத் தெரிய வேண்டும். கிளியை வெளியே விடவேண்டும் என்பது அடைத்து வைத்திருப்பவர்களுக்குப் புரிய வேண்டும் அமைதி என்பது இரண்டு வகையில் வரும் என்பது எல்லாருக்கும் விளங்க வேண்டும். "உலக சனத்தொகையில் அரைப் பகுதியினர் பெண்கள். உலகின் மொத்த வேலை நேரத்தில் 2/3 பங்கு பெண்களால் ஆற்றப்படுகிறது. உலகின் மொத்த வருவாயில் 1/10 பங்கு மட்டுமே பெண்களுக்கு வருகிறது. அத்துடன் உலகின் மொத்தச் சொத்துடமையில் 1/100 பங்குக்கும் குறைவான அளவே பெண்களுக்கு உரிமையாக இருக்கிறது."

இது 1980ம் ஆண்டு வெளியிடப்பட்ட ஐ. நா. அறிக்கை தரும் விபரம்.

உலக உணவு உற்பத்தியில் பெண்கள் பெரும் பங்கு வகிக்கின்ற போதிலும், மறந்தும் 'விவசாயி' என்ற 'பிம்பம்' பெண்ணுக்குத் தரப்படுவதில்லை.

நிர்வாக சேவையில் பத்து வீதமானவர்களே பெண்களாயிருத்தல் கூடும் என்னும் கட்டுப்பாடு பற்றி நாம் ஆழமாகச் சிந்திக்க வேண்டிய நிலையில் உள்ளோம். வீட்டு நிர்வாகத்தைக் கட்டாயம் பெண்களே செய்ய வேண்டும் என்று வற்புறுத்தும் சமுதாயம், நாட்டு நிர்வாகம் செய்ய அவர்கள் லாயக்கற்றவர்கள் என்று எந்த ஆதாரம் கொண்டு தீர்மானிக்கிறது என்பது புரியவில்லை.

வாழ்வில் எந்த ஒரு காரியத்தையும் தன்னால் செய்ய முடியும் என்று நம்புகிறவனே இறுதியில் அதைச் செய்து முடிப்பவனாக இருப்பான். இன்றைய பெண்கள் நாட்டு நிர்வாகத்தைத் தம்மால் செய்ய முடியும் என்று நம்புகிறுர்கள். நாட்டுக்காக தியாகம் செய்யவும் இனத்துக்காகப் போராடவும் தம்மால் முடியும்என்று நம்புகிறுர்கள்.

இன்று அதை பல்லாயிரக் கணக்கானோர் நிரூபிக்கின்றார்கள்.

உலகத்தில் பெண்களுக்கு விதிக்கப்பட்ட பொதுவான அடக்கு முறைகளுக்கு மேலாக இந்துமதம் தனிப்படப் பெண்களுக்குச் சில வரம்புகளைக் கட்டியுள்ளது.

இந்து மதக் கொள்கைப்படி பெண்கள் வேத நூல்களைப் படிக்கக் கூடாது. பெண்களுக்குப் பூநூல் அணியப்படுவதில்லை, (அண்மையில் ஒரு பெண்ணுக்குப் பூநூல் அணியப்பட்ட செய்தி மிக அதிசயமாகப் பிரசுரமாகியிருக்கிறது பத்திரிகைகளில்) பெண்கள் இறைவனைப் பூஜிக்க உரிமையற்றவர்கள். நீர்க்கடன் செய்வதற்கு எப்போதும் ஆண் சந்ததியினரே உரிமை பெறுவர். இவை எல்லாவற்றுக்கும் மேலாக இந்து மதத்தில் ஒரு பெண் கன்னியாக இருக்க உரிமையில்லை. ஒரு பெண்ணுக்கு நீண்ட காலம் பொருத்தமான கணவன் வாய்க்கவில்லை என்றால், அந்தப் பெண்ணை வாழை மரம் ஒன்றுக்கு மணம் முடித்து அந்த வாழை மரத்தை வெட்டி அவளை கைம்பெண்ணாகச் செய்துகைம்மைக்கோலத்தில் அவள் வாழ்வு நடத்த அனுமதிக்கப்பட்டாள். இது நாங்கள் நடந்து வந்த பாதை! இந்தப் பாதைகளே எமது முக்கியமான எதிரிகள்.

இன்றைக்கும் திருமணம் என்பது ஒரு ஆண் ஒரு பெண்ணை உடைமையாக்கும் சடங்காகவே நடைபெறுகிறது. சடங்கை ஆழமாக நோக்குபவர்களுக்கு அது புரியும்.

மக்கள் வேட்டையாடித் திரிந்த காலத்திலே பெண் ஒருத்தி ஒரு ஆணினால் பயன்படுத்தப்பட்ட உடனே அதன் அடையாளமாகக் கூரிய கல் ஒன்றினால் அவள் நெற்றியில் குற்றி அந்தக் குருதியை உச்சி தொடங்கும் இடத்தில் இட்டார்களாம். இதுதான் இன்றுவரை சிந்தூரச் சடங்கு, குங்குமத் திற்றல் சடங்கு என்ற பெயரில் இடம் பெறுகிறது. திருமணம் செய்த பெண்கள் நெற்றியிலும் உச்சியிலும் குங்குமம் அணிய வேண்டும் என்ற வழக்கு அந்தப் பாரம்பரியத்தின் எச்சமே!

மஞ்சளும் குங்குமமும் மங்கலப் பொருள்கள் எனக் கூறப்படுகின்றன. அந்த மங்கலத்துக்குப் பின்னால் கணவனின் இழப்பைக் கொடூரமாக்கும் கபடத்தனம் மறைந்திருப்பது சிந்திக்கக் கூடியவர்களுக்குப் புரியும். ஆண்களுக்கு ஏன் இத்தகைய மங்கலப் பொருள்கள் இல்லை? மனைவி இறந்தவுடன் ஏன் அவர்கள் இந்த மங்கலப் பொருள்களை இழந்து போவதில்லை?

எமது சமுதாயத்தில் பெண் பார்த்தல்' என்பது மிகவும் கேவலமான ஒரு சடங்கு. உயிருள்ள ஒரு பெண் ... சந்தைக்கு வருகிறாள். ஒரு ஆணுக்கு... பல பெண்களிடையே ஒரு பெண்ணைத் தெரிவு செய்து மணந்து கொள்ள உரிமை இருக்கிறது. பெண்ணுக்கு ஏன் அந்த உரிமை மறுக்கப்படுகிறது.

'சீதனம்' என்ற பிசாசு சமுதாயத்தில் பெண்கள் மீது ஏற்படுத்தியிருக்கும் தாக்கம் எல்லாருக்கும் தெரிந்த ஒன்றுதான், ஈழத்தமிழனின் பண்பாட்டில் மிகக்கறை படிந்த அத்தியாயம் இது. சீதனப்பிசாசு திருமணத்தை எதிர்பார்க்கும் பெண்களை சித்திரவதை செய்வது பழங்கதை. திருமணம் முடித்த பெண்களை வேறு வேறு வடிவங்களில் தாக்குவது அரைப்பழசான கதை! ஆனால் அது கருவில் இருக்கும் பெண் குழந்தைகளையும், மண்ணில் பிறந்த ''உடன்பச்சை'' பெண்சிசுக்களையும் மரண தண்டனைக்கு உட்படுத்துவது புதிய கதை.

கருவில் இருக்கும் குழந்தை ஆணா பெண்ணா என அறிந்து கொள்ளச் செய்யப்படும் ஒரு சோதனை '' அம்னியோ சென்ரசிஸ் '' எனப்படும். 1978 - 1988 க்கு இடைப்பட்ட காலத்தில் இச் சோதனையைச் செய்து பார்த்ததனால் சிதைக்கப்பட்ட பெண் கருக்கள் 78.000 என்று இந்திய சஞ்சிகை ஒன்று கூறுகிறது. இந்த நிலை எமது நாட்டுக்கு வரக்கூடாது!

எமது நாட்டிலே ஒரு பெண்ணின் 55 வருட வாழ்வெல்லையிலே 15 வருடகாலம் சமையல் செய்வதிலேயே கழிந்து விடுவதாய் ஓர் ஆய்வாளர் கூறுகிறார். ஆனால் அந்த உழைப்பு உழைப்பாகக் கருதப்படுவதில்லை. ஏன்? பெண்ணுடைய எந்த உழைப்புமே உழைப்பாகக் கருதப்படுவதில்லை. வீட்டிலே அவள் செய்யும் வேலை எல்லாம் '' கடமை '' என்ற சொல்லுக்குள் அடங்கிவிடும். வீட்டிலே பெண் செய்யும் சமையல், சலவைத்தொழில், பிள்ளைக்குப் பாடம் சொல்லித்தரும்

உழைப்பு எல்லாம் கடமை! வெளியிலே அவை ஆண்களால் செய்யப்பட்டால் அவற்றுக்குக் கூலி தரப்பட வேண்டும்! ஆகவே பால் அடிப்படையில் அமைந்த தொழிற் பாகுபாடு நீக்கப்பட வேண்டும் என்பது மட்டுமல்ல... ஒரு பெண் செய்யும் தொழில்களுக்கெல்லாம் உரிய கூலி வழங்கப்பட வேண்டும்.

எமது இலங்கையின் சுதந்திர வர்த்தக வலயத்திலே வெளிநாட்டு நிறுவனங்கள் பெண் தொழிலாளர்களையே அதிகம் பயன்படுத்த விரும்புகின்றன. குறைந்த சம்பளத்துடன் வேலை வாங்கலாம் என்பதே நோக்கமாகும். மலைநாட்டிலே பெண் தொழிலாளருக்குச் சமசம்பளம் வழங்கப்படுவதில்லை என்ற கோஷம் பழையது ஆனால் இன்னும் தீர்க்கப்படாதது.

தொழிலுக்காக வெளிநாடு செல்பவர்கள் தொடர்பான தரவுகளை ஆராய்ந்தால் ஓர் உண்மை தெரியவரும். வெளிநாடுகளில் குறைந்த தர வேலைகளைச் செய்யச் செல்பவர்களில் பெண்களின் நூற்றுவீதம்அதிகமானது.(பணிப்பெண்கள் போல) என்பதே கசப்பான அந்த உண்மையாகும்.

சோஷலிச நாடுகள் வேலை செய்யும் பெண்களுக்குப் பதினைந்து வாரப் பிரசவ லீவு வழங்குகின்றன. இங்கு பன்னிரண்டு வாரம் லீவு வழங்கப்படுதல் கூடக் கொள்கையளவில் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளதே தவிர நடைமுறைக்குச் செம்மையாக வரவில்லை இன்னும்!

"பெண்களிடம் இரகசியம் கூறக்கூடாது. அவர்கள் எதையும் நாலுபேருக்குச் சொல்லி விட்டுத்தான் வேறு வேலை பார்ப்பார்கள். பெண்ணுக்கு ஆசை அதிகம் அவளிடம் பணத்தை நம்பிக் கொடுக்கமுடியாது" என்று சமுதாயம் முற்றாக நம்புகிறது. பெண்களிடம் மட்டும் தான் இக்குணம் உள்ளது என்ற நம்பிக்கைக்கு எந்த ஆதாரங்களும் இருப்பதாகத் தெரியவில்லை. அப்படி இருந்தால் அது பெண்களின் உணர்வுகளும் மன எழுச்சிகளும் அடக்கப்பட்ட வெளித் தொடர்புகள் இல்லாது அறிவு விருத்தியடையாததன் விளைவுகளாகவே இருக்கும்.

பெண்கள் மீது உபயோகப்படுத்தப்படும் பலாத்காரம் தொடர்பாக இன்னொரு விடயத்தைக் குறிப்பிட வேண்டும். எமது நீதிமன்றங்களில் பலாத்கார வழக்கு ஒன்று தாக்கல் செய்யப்பட்டிருந்தால்... பெண் தன்னுடைய சம்மதமின்மையை அங்கு நிரூபிக்க வேண்டும். இது மிக விசித்திரமான ஒரு எதிர்பார்ப்பு! பலாத்கார விடயங்களில் எதிர்ப்பை உடல் ரீதியில் காட்டுவது...கொலை நடைபெறவே வழிவகுக்கும் என்பது வைத்தியர்களின் அபிப்பிராயம்! ஆகவே ஒரு பெண்ணை ஒரு ஆண் பலாத்காரம் செய்யவிரும்பினால் அவள் ஒன்றில் அதை எதிர்த்து இறந்து போக வேண்டும். அல்லது உடன்பட்டு அவனோடு போய்விட வேண்டும் என்பது தான் சட்டமும் சமுதாயமும் எதிர்பார்க்கும் விடயங்களா?

குடும்பக் கட்டுப்பாடு என்பது குடும்பத்தின் நன்மைக்காகவும் நாட்டின் நன்மைக்காகவும் செய்யப்படும் ஒரு நடவடிக்கை. ஆனால் அது தன் சுமையை முற்றாகவே பெண்களில் இறக்கிவிட்டிருப்பது எல்லாரும் அறிந்த விடயம். குடும்பக் கட்டுப்பாடு ஆலோசனைகளை ஆண்கள் அனுசரிப்பது மிக அருமை.

பெண்களுக்கு இந்துமதக் குருமார் வழங்கும் வழமையான ஆசிகளில் ஒன்று... "தசாஸ் யாம் புத்ரனாம் தேஹி... பதிம் ஏகாதசம் க்ருதி..." என்பதாகும். "நீ பத்து ஆண்குழந்தைகளைப் பெறுவாய். பின்னர் பதினொராவதாக உன் கணவனை உன் குழந்தை போலப் பேணுவாய்" என்பது இதன் பொருள். அவனைக் குழந்தை போலப் பேண அவள்! அவளைக் கவனிப்பது யார்?

திருமண வீட்டுக்கும் கோயில் திருவிழாக்களுக்கும் போகும் போது தமது மனைவியரைத் தவறாமல் அழைத்துச் செல்லும் ஆண்கள் பலர் அறிவியல் நிகழ்ச்சிகள், இலக்கியக் கலந்துரையாடல்கள், பொது விடயங்கள், சமூகப்பணிகள் போன்றவை தொடர்பாகத் தாம் செல்லும்போது பெண்களை அழைத்துச் செல்வதில்லை. பெண்களும் போக விரும்புவதில்லை, இது சிந்திக்கப்பட வேண்டிய விடயம்!

பெண்கள் மீது இவ்வளவு அழுத்தங்களை ஏற்படுத்தும் சமுதாயம் பெண்களைத் தெய்வமாக வழிபட வேண்டும் என்று கூறுவது வியப்பானது என்று சிலர்

கூறுவர். இந்த நடவடிக்கை "ரியாக்சன் போமேசன்" ( Reaction formation) என்று உளவியலாளரால் கூறப்படும். மனிதர்கள் தமக்குள்ளே செயற்படும் ஒரு உந்துதலை மறைப்பதற்கு அதன் நேர் எதிரான உந்துதலுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பர். இறந்து போக வேண்டும் என்று விரும்புகிற ஒரு நோயாளியை அதீதமாகக் கவனிப்பது இதே போன்ற ஒரு நடவடிக்கை.

பூமியைப் பூமாதேவி என்று அழைப்பதும் கல்விக்குத் தெய்வம் சரஸ்வதிஎன்பதும் வீரத்தின் கடவுள் துர்க்கை என்பதும் "ரியாக்சன் போமேசன்" நடவடிக்கைகளே! வீரத்தின் தெய்வம் ஒரு பெண் என்பதைச் சமுதாயம் உண்மையிலே நம்புமாயின் எமது பெண்களை வீராங்கனைகளாகக் காண்பதற்கு மட்டும் ஏன் அது தயங்கவேண்டும்?

ஆதிசங்கரர் வரலாற்றிலே சரஸவாணியைத் தெய்வமாக்கினார்கள். மண்டனமிசிரர் ஆதிசங்கரரோடு வாதிட்டுத் தோற்றார். தனது கணவர் தோற்ற பிறகு .. ஆதிசங்கரருடன் வாதிட்ட சரஸவாணியை வெற்றி கொள்ள ஆதிசங்கரரால் முடியவில்லை. ஆனால் வரலாறு சரஸவாணியை அறிவு நிறைந்த பெண்ணாகக் காணவில்லை. அற்புதத் தெய்வம் என்றே பெயரிட்டது. "பெண்கள் அறிவுள்ளவர்களாக இருக்க முடியாது. அப்படி இருந்தால் அது தெய்வீகம் கலந்த நிலை" என்பது தான் சமுதாயத்தின் கருத்து.

பெண்களைத் தெய்வமாக்க வேண்டாம். சமுதாயம் அவர்களின் நியாயமான மன உணர்வுகளைப் புரிந்து கொண்டால் போதும். எங்கள் சமுதாயம் இப்போது இருப்பதை விட மேலும் அதிகமான அமைதியுடனும் செழுமையுடனும் அமைதல் வேண்டும். எங்களை நாங்களே ஆட்சி செய்யும் காலம் நெருங்கும் வேளையில் எங்கள் கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றுக்கு ஊறு செய்யாத வகையிலே எமது பெண்களின் விடுதலை அமைதல்வேண்டும். சமுதாயம் பெண்கள் மீது தான் செலுத்தும் அழுத்தங்களைக் குறைத்து அவர்களை நிம்மதியும் நிறைவுமாக வாழச் செய்தல் வேண்டும்.



போராட்டத்தில், புடமிடப்பட்ட உருக்கு போன்ற ஒரு கட்சி இல்லாமல், சம்பந்தப்பட்ட வர்க்கத்தின் அனைத்து நேர்மையான மக்களதும் நம்பிக்கையை அனுபவிக்கும் ஒரு கட்சி இல்லாமல், வெகுஜனங்களின் மன நிலையை அவதானித்து செல்வாக்கு செலுத்தும் ஆற்றலுள்ள கட்சி இல்லாமல் அத்தகைய போராட்டத்தை வெற்றிகரமாக நடத்த முடியாது.

— லெனின்



# களத்திலிருந்து ஒரு கடிதம்



தமிழீழம்
06-04-1990

அன்புள்ள கலாக்கா,

நாம் நலம். உங்களதும் குழந்தைகளதும் நலன்கட்கு என் வாழ்த்துக்கள்.

அக்கா! உங்கள் குடும்பம் மகிழ்ச்சியுடனும் குதூகலத்துடனும் எம்தேசத்தின் விடுதலையினை எதிர்பார்த்திருக்கும், விடுதலையினை வரவேற்க ஆவலுடன் காத்திருக்கும் என நம்புகின்றேன். எங்களுடைய இனம் தலை நிமிர்ந்து வாழும் எங்கள் தேசத்தின் விடுதலையை விரைவில் வென்றெடுப்போம் என்ற உறுதியுடனும் நம்பிக்கையுடனுமே நாமும் போராடிக் கொண்டிருக்கின்றோம்.

ஆனால், எதிரியின் இன அழிப்பு நடவடிக்கைகள் எம்மினத்தில் உயிரழிவினையும், பொருள் அழிவினையும் மட்டும் ஏற்படுத்தவில்லை. எமது கலை, கலாச்சாரத்தினை அழித்தும் வர்க்க முரண்பாடுகள் சாதி ஒடுக்குமுறைகள், பெண் ஒடுக்குமுறைகள் சமுதாய சீர்கேடுகளினை மிக மோசமாக வளர்த்தும் தமிழினத்தின் உயர்நற்பண்புகளை புதைத்தும், எம் தேசத்தைச் சிதைக்க எதிரி திட்டமிட்டு செயற்பட்டதனையும், அதன் விளைவாக சமுதாய சீர்கேடுகள் ஆங்காங்கே தலை தூக்கி இருப்பதையும் கண்கூடாக காண்கின்ற போது என் நெஞ்சம் இதுவரை காணாத சுமையினைக் கண்டது போல் வேதனைப்படுகின்றது.

அக்கா! எமது விடுதலைப் போராட்டத்தை மக்கள்போராட்டமாக மலர வைப்பதற்காக இதுவரை காலமும் நாம் கெரில்லாப் போர் முறையில் ஈடுபட்டோம் அல்லவா? எமது கெரில்லாப் போராட்ட வடிவத்திற்கமைய தலைமறைவு வாழ்க்கையையும் நாம் மேற்கொண்டிருந்தோம் என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும். அந்நேரத்தில்... காட்டில் நாம் மிகக் கடினமான சுமைகளைச் சுமக்கும் போதும் இராணுவத்தினர் எங்கு பதுங்கியிருப்பார்களோ என்ற நிலையில் சத்தமின்றி கஷ்டத்தின் மத்தியில் பல மைல்கள் முட்பற்றைகள், அடர் காடுகளினூடே ஆறுகளை, மேடு பள்ளங்களைத் தாண்டி எதிரியினால் காடுகளில் விதைக்கப்பட்ட மிதிவெடிகளைக் கடந்து வரும்போதும், களைத்து ஒய்வு எடுக்க எங்காவது எமது சுமையினை இறக்கிவிட்டு இருக்கின்ற அந்த நாவரண்ட நேரத்திலும் நாம் படுகின்ற இக்கஷ்டங்களும் உயிர் அர்ப்பணிப்புக்களும் எம் இனம் விடுதலை அடைவதற்கே என்று அந்த இறக்கிய சுமைகளில் தலை சாய்த்து படுத்துக் கொண்டே கதைப்போம்.

அதுவரைதானே கஸ்டங்கள். செல்லக் குட்டிகள் சுதன் மீனா வர்ணன்...... இந்த இடத்திற்கு வரக்கூடாது. நாங்கள் இப்படி காட்டில் தாகத்துடனும் களைப்புடனும் படும் கஷ்டங்களிற்கு அவர்கள் ஆளாகக் கூடாது என்றெல்லாம் எமது வீட்டைச் சூழ இருக்கின்ற உங்கள் பிள்ளைகளின் அந்த பிஞ்சு முகங்களை நினைத்துக் கதைப்போம்

இரவில் சிலிர்நீர் சொட்டும் ஈரநிலத்தில் உரப்பைகளால் தயாரித்த எம் படுக்கை விரிப்புகளில் படுத்துக்கொள்ளும் போதும் கொடிகள் முட்பற்றைகளுக்கூடாக சுமையுடன் திசைகாட்டியால் இடம் பெயரும் போதும், பாதைமாறி கஷ்டப்படும் போதும் எம் சக தோழர்கள் காயப்பட்ட நிலையில் மரணவேதனையில் அண்ணா...அண்ணா... என முனகும் போதும் எம் தோழர்களின் புதை குழியில் மண் போடும் போதும் . மலரப்போகும் எமது தாயகம் பற்றிய எத்தனையோ கனவுகளையும் எண்ணங்களையும் சுமந்து கொண்டே எமது தலை

மறைவு வாழ்க்கைப் போராட்டத்தில் உறுதியுடன் ஈடுபட்டோம்.

அக்கா! எதிரியுடன் நேருக்கு நேராகப் பொருதி அவனுடைய இராணுவ அணியைச் சின்னாபின்னப்படுத்தி எம் மக்களின் பாதுகாப்பை உறுதி செய்வதிலும் ஒரு வளமான தேசத்தை கட்டியெழுப்புவதற்காக ஊண், உறக்கமின்றி பாடுபடும் நேரத்திலும் எதிரியின் சின்னத்தனமான நடவடிக்கைகளின் விளைவாக 'இளம் பெண்கள் போதை வஸ்துக்கு அடிமை. மாணவர்கள் போதை வஸ்துவினால் பாதிக்கப்பட்டு வைத்திய சாலையில் அனுமதி' என்ற செய்திகளின் உண்மை நிலையினை நேரில் சந்திக்கின்ற போதும் என்னால் வேதனையைத் தாள முடியவில்லை. யுத்த களத்தில் எதிரியின் சன்னங்களுக்கும் ஷெல்களுக்கும் மத்தியில் நின்று போராடும் போது எதிரியின் மீது ஏற்படும் கோபத்தை விட இந்நிலையில் தான் எதிரிமீது அதிக கோபமும் ஆத்திரமும் ஏற்படுகின்றதக்கா.

நாம் சந்தித்த இந்த இரு நாட்டு எதிரிகளுடனான மோதலை விட மிகப்பெரும் விடுதலைப் போராட்டம் இனிமேல்தான் எமக்குண்டு என்றே நான் கருதுகின்றேன்.

ஆம்! எமது கெரில்லாப் போராட்டத்தின் அடுத்த கட்டமாக மக்கள் போராட்டம் மலர வேண்டிய காலம் வந்து விட்டதக்கா. எமது நாட்டில் விடுதலை என்பது வெறுமனே எமது எல்லைகளை மட்டும் மீட்டெடுக்கும் போரட்டமல்ல, எமது நாடும் மீட்டெடுக்கப்பட வேண்டும்.

இன்று எமது அரசியல் நிலையானது நாம் இந்திய இராணுவத்துடன் நடத்திய யுத்தத்தின் விளைவாக சிறிலங்கா அரசு எம்முடன் ஓர் நிபந்தனையற்ற பேச்சு வார்த்தை நடத்தும் அளவிற்கும் வளர்ச்சி கண்டது மட்டுமல்ல, எமது அரசியற்பிரிவு பதிவு செய்யபபட்ட ஓர் கட்சியாகவும் வளர்ந்துள்ளது.

நாம் எமது கட்சியினை ஒரு மக்கள் கட்சியாகவே அமைக்கின்றோம். எமது மக்களது ஜனநாயக சோஷலிச உரிமைகளைப் பேணவும் மக்கள் இக்கட்சியின் மூலம் தமது சகல உரிமைகளையும் தாமே வென்றெடுக்கவும் ஒரு தளமாகவே எமது கட்சி அமைக்கப்படுகின்றது.

இக்கட்சி அமைப்பின் மூலமே எம் தேசத்தின் விடுதலை மீட்டெடுக்கப்பட வேண்டும்; மீட்டெடுக்கப்பட முடியும்.

இன்று எம் நாட்டில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள், ஒருவரை ஒருவர் சுரண்டி வாழும் சீர்கெட்ட நிலை மாறவேண்டும்.

முன்பு தொழில் பாகுபாடு காரணமாக ஏற்பட்ட எமது சாதிய முறையிலான சமூக அமைப்பு மாறி நல்லதொரு சமத்துவமான சமூக அமைப்பின் உருவாக்கத்தில் அனைவரும் ஒன்றிணைந்து போராடவேண்டும்.

இங்குள்ள சாதிய முறையானது முன்பு தந்தையின் தொழிலில் தந்தைக்கு உதவியாக மகனோ குடும்பத்தினரோ இணைந்து இயங்கியதன் மூலம் பழகி, தந்தை இறந்த பின் அக்குடும்பம் அத்தொழிலை தொடர்ந்ததன் மூலம் ஒரு குறிப்பிட்ட சில குடும்பங்களினூடாக அத்தொழில் பயிற்றப்பட்டு அந்தச் சில குடும்பங்களும் அத்தொழிலிற்கே உரியவர்களாக கருதப்பட்டதால் ஏற்பட்ட ஒரு முறையே ஆகும்.

எல்லாவிதமான தொழில்களிலும் எல்லா விதமானோரும் ஈடுபடுவதன் மூலமும், மற்றைய தொழில்களில் ஈடுபடுபவர்களை மதித்து மனிதாபிமானமாக நடப்பதன் மூலமும் தொடர்ச்சியான போராட்டங்கள் மூலமும் புரட்சிகரமான செயற்திட்டங்கள் மூலமும் காலப்போக்கில் இச்சாதிய முறையினை இல்லாதொழிக்க முடியும்.

எனவே, மக்கள் அனைவரும் இணைந்து எமது சுயநிர்ணய உரிமைப் போராட்டத்தில் இணைந்து நல்லதொரு சமூக அமைப்பை உருவாக்கப் போராடினாலே எமது பூரண விடுதலையை வென்றெடுக்க முடியும்.

எமது கட்சியான விடுதலை புலிகள் மக்கள் முன்னணியின் கிளைகளை நாம் ஒவ்வொரு கிராம சேவகர் பிரிவிலும் அமைத்து வருகின்றோம். இவை சிற்றூர் அவைகள் எனப்படும் மக்கள் அமைப்பாகும். இதன் மூலம் ஒவ்வொரு கிராமத்தினதும் சிறு பிரச்சனைகள், மக்களுடைய தேவைகள் என்பன அறியப்பட்டு, ஆராயப்பட்டு, நல்லதொரு தீர்வினை எடுக்கக்கூடியதாக இருக்கும்.

இச் சிற்றூர் அவைகள் இணைந்து ஒவ்வொரு உதவி அரசாங்க அதிபர் பிரிவிலும் ஒவ்வொரு வட்ட அவைகளினை அமைக்கும். இவ்வட்ட அவை ஒரு செயற்குழு அமைத்து அப்பிரிவிலுள்ள சகல கிராமங்களின் தேவைகளையும் அறிந்து இதற்கு மேற்பட்ட பிரிவான அரசாங்க அதிபர் பிரிவுகளில் இயங்கும் வட்ட அவைக்கு வழங்கும்.

இதன் மூலம் மக்களின் சகல தேவைகளும் அறிந்து ஆராயப்பட்டு மத்திய குழுவினை வந்தடைகின்றது. இவற்றை நாம் பூர்த்தி செய்வதன் மூலம் எம் நாட்டினை மீட்டெடுக்க எம்மக்கள் ஆற்றும் பங்களிப்பினை ஊக்கப்படுத்த பூரணமான விடுதலையினைப் பெற போராடுவோம்.

இம் மக்கள் முன்னணியின் பொதுக் குழுவினர் எமது மக்கள் முன்னணியின் உபபிரிவுகளான விடுதலைப் புலிகள் மாணவர் பேரவை விடுதலைப்புலிகள் தொழிலாளர் பேரவை, விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணி ஆகியவற்றின் இரு பிரதிநிதிகளும் அங்கம் வகிப்பர்.

இவ் உப அமைப்புக்கள் மூலம் மாணவர்களும் தொழிலாளர்களும், பெண்களும் சகல ஒடுக்கு முறைகளிலுமிருந்து விடுபடுவதற்காகவே போராட முன் வருவதன் மூலம் எமது போராட்டம் கூர்மைப் படுத்தப்படுகின்றது.

அக்கா! பெண்ணினம் இச்சமுதாயத்தில் பல வழிகளிலும் ஒடுக்கப்பட்டு வருகின்றது. ஆணாதிக்க சமூக அமைப்பு சீதனக் கொடுமைகள் பெண்கள் தமது வாழ்வைத் தேர்ந்தெடுக்கவோ தீர்மானிக்கவோ முடியாத நிலை, செய்யும் தொழிலிற்கு தகுந்த ஊதியம் இன்மை எனப் பல வடிவங்களில் அடக்குமுறை எம்மீது திணிக்கப்படுகின்றது.

ஒரு சில பெண்கள் மட்டும் போராடுவதன் மூலம் அனைத்துப் பெண்களினதும் விடுதலையை வென்றெடுப்பது என்பது போலியான வெறும் பேச்சாகவே அமையும். அனைத்து தமிழீழப் பெண்களும் ஓரணியில் திரண்டு நின்று போராடினாலே எமது போராட்டம் முழுமை பெறும்.

அக்கா நாம் இன்று அல்ல... பல நூற்றாண்டு காலமாகவே ஒடுக்கப்பட்டு வந்துள்ளோம். இதனால் அநேகமான பெண்கள் தாம் ஒடுக்கப்படுகின்றோம் என்பதையே புரியாது உள்ளனர் என்பதோடு அவ் ஒடுக்கு முறையை பேணிப் பாதுகாத்து வருகின்றனர்.

அக்கா! நாம் சிறுவயது முதலே ஆண் பெண் என்று பாகுபடுத்தப்பட்டே வளர்க்கப்படுகின்றோம். சிறுவயது முதல் சமுதாயத்தில் ஒரு தாய் செய்யும் வேலைகளையே பெண்ணின் கடமையாக எண்ணி வளர்க்கப்படுவதும் பய உணர்வு ஊட்டப்பட்டு வீர உணர்வுகள் முளையிலேயே அகற்றப்படுவதும், பெண் பிள்ளைகளைச் சீண்டி அழ வைப்பதும். எந்தவித முடிவையும் சுயமாக எடுக்க அனுமதிக்காது மறுப்பதும். தன்வீடு தன் சகோதரம் என்று வளர்க்கப்படுவதன் மூலம் பெண்கள் மிகக் குறுகிய வட்டத்தினுள் வளர்ந்து மற்றவரது இன்ப துன்பங்களை மனப்பூர்வமாக புரிந்து கொள்ள முடியாமலும் கூட்டு வாழ்க்கைக்கு அப்பாற்பட்டும் வளர்ந்து போட்டி மனப்பான்மையை விட பொறாமை உணர்வுகள் கூடி சமுதாயத்தில் ஒரு பிரச்சனையாகி நிற்கும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளோம்.

இக் காரணங்களால் நாம் அழுவதே எமது பிரச்சனைகளுக்குத் தீர்வு என்று கருதுகின்றோம். நாம் அழுவதன் மூலம் எமது பிரச்சனைகள் தீர்க்கப்படாது. அப் பிரச்சனைகளை ஆராய்ந்து அவற்றைத் தீர்க்க முயற்சி செய்ய வேண்டும். ஆனால் எம் பய உணர்வு அதற்குக் கூட தடையாக அமைந்து விடுகின்றது.

அக்கா! இந்தக் கல்விதான் பெண்களுக்குரியது என்று ஒதுங்கியிராமல் எல்லாத் துறைகளிலும் கற்று சகல தொழிலிலும் ஈடுபடுவதற்கு பெண்கள் முன்வர வேண்டும். நாம் செய்யும் கைத்தொழில்களையும் விஞ்ஞான ரீதியாக முன்னேற்றுவதன் மூலம் எமது பொருளாதாரத்தை விருத்தி செய்து கொள்ளலாம்.

கடின வேலைகளில் ஆண்களுக்கு நிகராக பெண்கள் உழைத்தும்கூட பெண்களின் கூலி ஆண்களின் கூலியை விட மிகக் குறைந்தளவிலேயே உள்ளதை நாம் கண்

கூடாக காணக்கூடியதாக உள்ளது. இவ் ஏற்றத் தாழ்வுகள் நீங்கப் போராட வேண் டும். பெண்களால் எந்தத் தொழிலையும் செய்ய முடியும் என்பதற்கு விடுதலைப் புலிப் பெண் போராளிகள் உதாரணமாக உள்ளனர். எம்மைப் போல் நிச்சயம் உங் களாலும்சகல வேலைகளையும் செய்ய முடியும்.

ஒரு பெண் திருமணம் செய்ய முற்படும் போது சீதனமாக பெருந்தொகைப் பணமும் பொருட்களையும் மணமகனுக்கு வழங்க வேண்டியுள்ளது. ஆணும் பெண் ணும் ஒரே வேலை செய்தாலும் பெண் ஆணைவிட உயர்ந்த வேலையில் இருந்தா லும் பெண்தான் ஆணிற்கு சீதனம் வழங்க வேண்டியுள்ளது. அவ்வாறிருக்கும்போது வீட்டு வேலைகளை மட்டும் செய்யும் பெண் களின் நிலையைக் கூற வேண்டியதில்லை. இச்சீதனக் கொடுமையை முற்றாக நீக்க நாம் அனைவரும் ஒன்றுதிரண்டு போராட முன்வர வேண்டும்.

குடிபோதைக்கு ஆளான கணவனிடம் அடி உதைகளை பெற்றுக்கொண்டு வீட்டுச் செலவிற்கு பணமின்றித் தவிக்கும் நிலைமை முற்றாக மாற்றப்பட வேண்டுமானால் பெண்கள் பொருளாதார வாழ்வில் முற் றாக இன்னொருவரைச் சார்ந்து நிற்கும் நிலைமையை முற்றாக இல்லாதொழிக்க வேண்டும்.

இந்த நிலையிலிருந்து நிச்சயம் நாம் விடுதலை பெறமுடியும். இன்று தமிழீழத் தின் சனத்தொகையில் 65% ஆனவர் பெண் கள். இவர்கள் ஒரு கொடியின் கீழ் அணி திரள்வதன் மூலம் நிச்சயம் எமது விடுதலை வென்றெடுக்கலாம்.

விடுதலைப் புலிகள் மக்கள் முன்னணி யின் கிளைகள் போல 7 பேர் கொண்ட செயற்குழு அமைப்புக் கொண்ட சிற்றூர் அவை, வட்ட அவை, மாவட்ட அவை, தலைமைச் செயற்குழு என எமது விடுதலைப் புலிகள் மகளிர் முன்னணியும் தனது கிளைகளை தமிழீழமெங்கும் பரப்பி வருகின்றது.

இதன் மூலம் அனைத்து தமிழீழப் பெண்களும் ஒரு அணியில் ஒன்று திரண்டு எமது உரிமைகளை மீட்டெடுக்க முற்படும் போது எம்மைச் சூழவுள்ள பல ஒடுக்கு முறைகள் தாமாகவே நீங்கும். மனித நேயம் மிக்க நாட்டு விடுதலையினை அமைப்பதன் மூலம் ஏனைய ஒடுக்குமுறை கள் அனைத்தையும் நீக்கி எமது இனத் தின் விடுதலையினை ஒரு முழுமையான விடுதலையாக்க அனைத்துப் பெண்களும் முன்வர வேண்டும்.

அக்கா! 14 வயதிற்கு மேற்பட்ட பெண் கள் மகளிர்முன்னணியில்இணைத்துக்கொள் ளப்படுவார்கள். நீங்களும் உங்கள் அம்மா மாமி, தங்கை மற்றும் உறவினர்களும் இவ்வமைப்பில் இணைந்து எமது போராட் டத்தினை முன்னெடுப்பதில் முழுமூச்சாக ஈடுபடவேண்டும். வேறென்ன? மீண்டும் சந்திப்போம்.

இப்படிக்கு
அன்புத் தங்கை
நிர்மலா



> அநியாயமான சட்டங்களுக்கு மனிதர் பணிய வேண்டும் என்ற மூடநம்பிக்கை இருக்கும் வரையில் அவர்களுடைய அடிமைத்தனமும் இருந்து கொண்டேயிருக்கும்.
>
> — மகாத்மா காந்தி

# துப்பாக்கிகளால்...

# இடம் மாறியுள்ள

மத்தியான வெயில் சுட்டெரித்தது வெய்யிலுக்குப் பயந்தோ என்னவோ காற்று ஒரு அங்குலம் கூட அசைய மறுத்தது.

' சீ ...12.40... நசல் இன்னும் 20நிமிஷம் கிடக்கு '

சுமதிக்கு ஒரேயடியாக வியர்த்து ஊத்தியது. இப்போதே இந்த வாங்கில் விழுந்து படுக்க வேண்டும் போலிருந்தது. தலையைச்சுற்றி வயித்தைப்பிரட்டி சத்தி எடுக்கப் போவது போல் அந்தரமாய் வந்தது.

' முன்னுக்கிருந்தாலாவது ஒரளவு என்னேயிறதெண்டு கவனிக்கலாம். இது பின்னுக்கு ஆகலும் அலுப்படிக்குது ......உள்ள சோம்பேறிக் கூட்டம் முழுக்கப் பின்னுக்குத் தான் நானுந்தான்......''

எரிச்சல் எரிச்சலாய் வந்தது. வியர்த்ததாலோ என்னவோ தலை ஒரேயடியாக அரித்தது...... இரண்டு கைகளாலும் விறாண்ட வேண்டும் போல் இருந்தது.

' ஒரேயடியா நாலு மணித்தியாலம் எழும்பாமல் இருக்கிறதெண்டாச் சும்மாவே ... ...? ஒன்பது மணிக்குத் துவங்கின வகுப்பெல்லே சீ ஒன்பது மணிக்கெங்கை துவங்கினது? ஒன்பதரைக்கெல்லோ ........ அரை மணித்தியாலம் பிந்தித் துவங்கிறதே டியூட்டரீலை ஒரு பாசானாப் போச்சு. முடிக்கேக்கை மட்டும் நேரத்துக்கு முடிப்பினம் '

ஆண்கள் வரிசையில் நாலாவது வாங்கில் ஓரமாக உட்கார்ந்திருந்த நீலசேட் போட்ட பையன் இரண்டாவது பாடத்திற்கே தூங்க ஆரம்பித்து விட்டான். இபபோது நிறையப்பேர் தூங்கி விழுகிறார்கள். தூக்கத்தில் கழுத்து மடியும்போது திடுக்குற்று விழித்து...... அசடு வழிய இரண்டு பக்கமும் பார்த்து...... உடனேயே மிகவும் உஷாராக கண்களை அகல விரித்து வெட்டி நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்து கொள்வார்கள்

அரை நொடியில் மீண்டும் தலை தொங்கிச் சரியும் ..... உடல்குலுங்க மீண்டும்உஷாராகுவார்கள். திடுக்குற்று விழிக்கும் போது பார்க்கவேண்டுமே சிரிப்புச்சிரிப்பாக வரும்.

' மாஸ்ட்டரை வந்து அவசரமாக ஆரும் கூட்டிக்கொண்டு போச்சின மெண்டா...... இனியும் என்னாலை இருக்கேலாது எழும்பி நிக்கப்போறன்...... கேட்டாச் சொல்றது தலையைச்சுத்தி என்னவோ செய்யுதெண்டு சீ ........ எல்லாரும் என்னைத்தான் பார்ப்பினம் ........ அதுக்கென்ன? அவைக்குத் தெரியப் போகுதே எனக்குச் செய்யிற வருத்தம் ..... ஒருவேளை அவையளுக்கும் இப்பிடித்தான் செய்யும் என்னேயிறதெண்டு பேசாம இருக்கினமோ தெரியாது.''

சுமதி பொறுமையிழந்து புழுங்கினாள். மாணவிஒருத்தி கேள்வி கேட்டாள். கேள்வி விளக்கமில்லாததாக இருந்திருக்க வேண்டும் மாணவர்கள் 'கொல்'லென் றுசிரித்தார்கள் ......அவளையே பார்த்தார்கள். ஆசிரியரும் சிரித்தார். பின்னர் ஏதோ கூறிச் சமாளித்தார்.......

'விளக்கங் குறைஞ்சவள் வாயைவச்சுக் கொண்டு பேசாம இருந்திருக்கலாம்' சுமதி கேள்விகேட்ட மாணவியை மனதுக்குள் திட்டினாள்.

ஆசிரியர் தேய்ந்து போன ''சோக்'' கட்டியை மேசை மீது வைத்தார். அசடு வழியும் புன்சிரிப்போடு அவசரமாக தலையைஆட்டிவிட்டு நகர்ந்தார்.......... எப்போதுமே வகுப்பை முடிக்கும் போது இப்படித்தான் சிரிப்பார். இவ்வளவு நேரமும் தொந்தரவு செய்ததற்கு மன்னித்து விடுங்கள் என்பது போலிருக்கும் அந்தச் சிரிப்பு.

சுமதிக்கு இப்போதுதான் அப்பாடா என்றிருந்தது. நிம்மதியாக மூச்சுவிட்டாள். மாணவர்கள் நெருக்கியடித்துக் கொண்டு வெளியே செல்லத் துடித்தார்கள். என்ன தான் வகுப்பில் அமைதியாக இருந்தாலும்

எப்போது வகுப்பு முடிந்து வெளியே செல்வோம் என்பதில் தான் எல்லோரும் குறியாய் இருந்துள்ளார்கள் என்பது அவர்களின் நடத்தையில் இருந்து தெரிந்தது.

சுமதிக்கு தனித்து வீடு செல்ல வேண்டியதை நினைக்க என்னவோ போல் இருந்தது.

'விசர்......... ஏன் தான் வராம விட்டுதுகளோ தெரியாது ........ மேகலாவும் சுதாவும் வராதது வகுப்பிற்கு வந்தபின் தான் சுமதிக்கு தெரிந்தது. ஆத்திரமாய் வந்தது.

'விசருகள் நேற்றே சொல்லியிருந்துதுகள் எண்டா நானும் நிண்டிருப்பன்...... அந்த நாயளுக்கை அரியண்டப்படுகிறதை விடப்பேசாம வீட்டிலை நிற்கலாம்' அந்த கண்ணாடிக்கார தடியனை நினைக்கவே சுமதிக்கு பயமாக இருந்தது. ' அந்த நாயள் இருக்கிறவரைக்கும் மனிசருக்கு நிம்மதியே இல்லை ... பாமினி, நித்தியாக்கள் அதாலை தானே போறவை இனி என்னேயிறது .... ? அதுகளோடை இவ்வளவு நாளா அவ்வளவாக் கதைக்கிறதும் இல்லை. இண்டைக்கு போக என்ன நினைக்குதுகளோ தெரியாது. இதிலை நினைக்கிறதிற்கு என்ன கிடக்கு எனக்கென்ன அவையோட அடிபிடி சண்டையே ........ கதைக்கிறதிற்கும் ஏதும் அலுவல் இருந்தாத்தானே கதைக்கிறதுக்கு'

நித்தியா ஆசிரியருடன் ஏதோ கதைத்துக் கொண்டு நின்றாள் பாடத்திற்கு விளக்கமாக இருக்கும்...... சுமதிக்கோ அவர்களுக்காக காத்திருப்பது வெறுப்பாக இருந்தது.

'வருகுதுகள்... வருகுதுகள் எங்கையோ ஒரு குருகுருத்த கோஸ்ட்டி எங்கை கூட்டு சேர்ந்ததுகளோ தெரியாது ரோட்டிலை அல்லோ பார்க்கவேணும். காய்.........கூய் எண்டு சத்திக் கொண்டு ......... போற வாற வாகனங்களுக்கும் சைட்குடுக்காமல் .........சிச் உதுகளோடை போனா எனக்கும் மரியாதை இல்லை...... இனி என்னேயிறது போய்த்தானே ஆகவேணும்'.

சுமதிக்கு எப்போதும் அவர்களிடம் ஓர் அந்நியப்பட்ட உணர்வே இருந்து வந்தது. ' என்ன சுமதி இண்டைக்கு 'பிறெண்ஸ்' ஐக் காணேல்ல தனிச்சுப் போனீர்......''

பாமினி இயல்பாகத்தான் கேட்டாள்...... சுமதிக்கு என்னவோ போல் இருந்தது.

''ஓமோம் என்ன நடந்ததெண்டு தெரியேல்லை இரண்டுபேரும் நிண்டிட்டினம் ......நீங்கள் நேரை வீட்டை தானே போறியள் ...........? ''

தயங்கியபடி சிரிப்பை வரவழைத்துக் கொண்டு நாசுக்காக கேட்டாள் சுமதி. '' இவள் நித்தியா ஏதோ துணி எடுக்க வேணும் எண்டாள் .. ...... என்ன நித்தியா எனக்கெண்டா ஒரே பசியாக் கிடக்குது நாளைக்கு ஈவினிங் நீயும் நானும் வந்து எடுப்பமன் ......... என்ன முழியை பிரட்டுராய் சொல்லன்..........''

'' என்னவோ நீ சொல்லுறாய் ......... சரி நாளைக்கு எடுப்பம். பிறகேன் நிக்கிறியள்........ ? 'அப்பாடா இவள் ஓமெண்டதே பெரிய புண்ணியம் இல்லாட்டி நானும் டவுண் முழுக்க உதுகளுக்கு பின்னாலை வாய் பார்த்துக் கொண்டு திரிஞ்சிருக்க வேணும்.'' யார் தான் கூட வந்தாலும் அந்த காம்படியால் போகவேண்டும் என்ற நினைப்பே சுமதிக்கு நரகவேதனையாய் இருந்தது.

'கடவுளே அவங்கடை காம்பை தாண்டி போறவரைக்கும் நீ தான் துணை'

...............' இண்டைக்கு எந்தச் சனியன் பிடிச்சவன் என்னேயிறானோ தெரியேல்லை ......... என்னை மட்டும் தனியா மறிச்சானென்டா என்னேயிறது......... வாடி எண்டு உள்ளுக்கை இழுத்துக் கொண்டு போனால் ........ ? உங்கை எத்தனை பேரை அப்பிடிச் செய்தவங்கள் ......... கடவுளே...... அப்பிடி மட்டும் ஒண்டும் நடக்கக் கூடாது'

சுமதிக்கு காம்பை நெருங்க நெருங்க அடிவயிற்றில் ஏதோ செய்தது. 'கடவுளே எனக்கேன் இப்படி வேர்க்குது ..... கை கால் எல்லாம் நடுங்குது...... பயமாக்கிடக்கு நான் என்ன செய்ய...... எவ்வளவு நேரத்துற்கு தான் தலையைக் குனிஞ்சு கொண்டு போறது....... பார்..... பார்......... தரித்திரத்திண்டை பல்லல எப்ப நிமிருவனென்டு பார்த்துக் கொண்டிருந்தவனாக்கும்.

இவளைப் பார்த்து பல்லை இழித்த இந்திய ராணுவத்தினன் யாரையோ கத்திக்

கூப்பிட்டபடி உள்ளே ஓடினான் ஒரு பெரிய கூட்டமே உள்ளேயிருந்து ஓடி வந்தது: கண்ணாடிக்காரனும் இன்னும் நாலைந்து பேரும் வந்தார்கள். சுமதி.........சுமதி .. .........சுமதி நில்லடி.

' சனியன் சனியன் பேரைச் சொல்லி கூப்பிடுகிறன்......... ஐயோ அவளவை யளும் போறாளவை நான் என்ன செய்ய? இன்னும் நாலஞ்சு பேர் வாறாங்கள்......'

கண்ணாடி போட்டவன் ஓடி வந்து சைக்கிள் கான்டிலை பிடித்துக் கொண்டான். சுமதி விழப்போனாள்... விழவில்லை. ......... அழுகை வெடித்துக் கொண்டு வந்தது. மறுபக்கம் பார்வையை திருப்பிக் கொண்டாள்.

' என்னடி நான் கூப்பிடுறன் நீ உன்டை பாட்டிலை திரும்பியும் பார்க்காம போறே என்ன .....?

"பாவி கான்டில்லை கையை போட்டுக் கொண்டு நிற்கிறானே. சனம் பார்த்தா என்னைப்பற்றி என்ன நினைக்கப் போகுது"

ஒழிச்சு ஒழிச்சு வைச்சு சாப்பாடு கொடுப்பியள் என்னடி?''

' உன்டை லச்சணத்திற்கு நாங்கள் கதைக்காதது ஒன்று தானே குறை. எளிய மூதேசி நீயும் ஒரு தமிழனே! இல்லாட்டி நடுறோட்டிலை ஒரு பொம்பிளைப்பிள்ளையை மறிச்சு வைச்சு சேட்டை விடுவியே...... அங்கா இந்தியாக் காரங்கள் முழுப்பேரும் இஞ்சதானே பார்த்துச் சிரிக்கிறாங்கள். உன்ரை கொக்கா தங்கச்சியை நடுறோட்டிலை ஆரும்மறிச்சு வைச்சிருந்தா உனக்குப் பார்க்க எப்படி இருக்கும்......... சிக்...... மனிசரெண்டாவல்லவோ அதை யோசிக்கிறதுக்கு.

''என்னடி முறைக்கிறாய்? ஊமையே வாயைத்திறந்து கதையன் ........ ஏதோ இன்டைக்குதான் புதுசாக் கதைக்கிறமாதிரி வெக்கப்படுகிறாய்: ......

' இனியும் ஏன் நாங்கள் உவங்களுக்குப் பயப்பட வேணும். நாங்கள் அழ அழத் தான் அவரவைக்கு செட்டு வாறது.



ஏதோ தாங்கள் சரித்திரம் படைக்கப்போற மன்மதக்குஞ்சுகள் எண்டு நினைப்புப்போல.சனமா வெளிக்கிட்டு உவங்களை கட்டிவச்சு உரிக்கவேணும். அப்பதான் நாங்கள் மனிசரா வாழலாம்.'

''டேய் எடடா கையை ராஸ்கல்கான்டில்லை இருந்து... எடுக்கப் போறியோ இல்லையோ' ஆத்திரத்தின் எல்லையில் சுமதி வாய் திறந்து கத்தினாள் அடுத்த கணம்.

ஏற்கனவே சிவந்திருந்த கண்ணாடிக்காரனின் கண்கள் மேலும் சிவப்பாக பளீர்...பளீர்... என சுமதியின் கன்னத்தில் மாறி மாறி அறைந்தான்...............

சுமதிக்கு பயம் மாறி ஆத்திரம் வந்தது. '' என்னடி நான் கதைக்கிறன் நீ பேசாம நிக்கிறாய் L. T .T. காரங்கள் எண்டா

தலை முடியை பிடித்து முகத்தை தன் பக்கம் திருப்பினான்.

''நல்லாத்தாண்டி கொழுத்துப் போனியள்......எனக்கே வாய் காட்டுறாய் என்னடி ...... எளிய...... ஏதும் கதைச்சியெண்டால் வெட்டி புதைச்சுப் போடுவன்...........க்கு என்னைப் பற்றி விளங்கேல்லை.

சுமதிக்கு கண்ணை மின்னி தலை சுற்றியது. கன்னங்கள் இரண்டும் விண்விண் என்று வலியெடுக்க தலை விறைத்துக் கொண்டு வந்தது.

'கடவுளே.........ஏ... என்ன மாதிரி அடிச்சான். ஒரு அடியிலையே உயிர் போயிடும் போல கிடக்கு. போனால் போகட்டும் உரிச்சுப் போட்டாலும் உவங்களை சும்மா விடக்கூடாது' தூ...... நாய்க்கூட்டம் எளிய வடுவாக்கள் எத்தினை நாளைக்கு உதில இருக்கப் போறியள் பார்ப்பம்.''

எள்ளும் கொள்ளும் வெடிக்கும் அவன் முகத்தைப் பார்க்க சுமதிக்கு மூச்சுத் திணறியது. தட்டுத்தடுமாறி சைக்கிளை எடுத்துக் கொண்டு வேகமாக இடத்தை விட்டுப் புறப்பட்டாள். பின்னால் அவன் கெட்ட வார்த்தைகளால் திட்டுவது கேட்டது.

'சிவனே ...... உவனிட்டைத் தப்பினது அருந்தப்பு ஒரு அடிதான்..... விறைச்சுப் போனன்...... நல்ல காலம் உதோட விட்டான் இல்லாட்டிக்கு ஏதோ பண்ணிப் போடுவாரே ....? உவையள் ஒவ்வொரு நாளும் போகவரச் சொல்லுவினம் நெடுகப் பார்த்துக் கொண்டு இருக்க ஏலுமே...... அது சரி நான் இனி என்னெண்டு ரியுசனுக்கு போறது. இந்தப் பாதையால போற தெண்டா இனி நடவாத காரியம்......... சரியான கறள் வச்சுக் கொண்டுதான் இருப்பான்... ...... நல்லா இருக்கட்டும் நான் ரியுசனுக்கு போகாம விடுவன்.

சுமதிக்கு இனி ரியுசனுக்கு போக முடியாததை நினைக்க அழுகை அழுகையாக வந்தது. பாமினியை நினைக்க ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

'என்ன இருந்தாலும் அவள் தன்ரை குணத்தைக் காட்டிப்போட்டாள். பயம் எண்டா கொஞ்சம் தள்ளிப்போய் என்றாலும் நின்டிருக்கலாம்தானே தப்பினம் பிழைச்சம் எண்டு ஓடி விட்டாளவை. சீ. ...அவளவையிலையும் பிழைசொல்லேலாது. உந்த இடத்தில இருந்தா ஒருவேளை நானும் உதைத்தான் செய்வன்.'

ஒழுங்கைக்குள் சுமதியைக் கண்டவர்கள் ஊடுருவல் பார்வையுடன் ஒருமாதிரியாகப்பார்த்துக் கொண்டு சென்றார்கள்.

'ஒரு வேளை இவைக்கு தெரிஞ்சிட்டுதோ...... சீ என்னண்டு தெரியும் அதுக்கிடேல தெரிஞ்சாத் தெரியட்டும் அதுக்கு இவைக்கு என்ன அங்க ... அய்யாவாறார் பாவம்.... இந்த வெய்யிலுக்கை எங்கை போறாரோ தெரியேல்ல. மணியத்தார் வட்டிக்காசு குடுக்க வேணுமாக்கும். அதுக்குத் தானோ தெரியேல்ல'

'அவனவன் பரம்பரைக் காசை வட்டிக்கு குடுத்திட்டு பெடியளையும் வெளிநாட்டுக்கு அனுப்பிப்போட்டு மகாராசா மாதிரி வீட்டில இருக்கிறாங்கள். நாங்கள் நாள் முழுக்க உழைச்சு அதையும் அவையளிட்டைக் குடுத்துப்போட்டு இப்பிடியே சாக வேண்டியதுதான்'

'சைக்கிளை சிலோ பண்ணிறார் ஏதும் கேக்கப் போறாரோ...... சீ......... அங்கை விளக்கிறார். எதுக்கும் எங்கை போறார் என்று கேப்பம்.''

''ஐயா......! எங்கை போறியள் ......?

'ஐயான்ரை முன்பல்லு அண்டைக்கு விழுந்தது. முகத்தைப் பார்க்க என்னவோ போல் கிடக்கு...... கொடுப்புப்பல்லு விழேக்கை. அவ்வளவு தெரியேல்ல'

''நான்...... உங்கை சங்கத்தில உரம் வந்திருக்காம். அதுதான் ஒருக்கா பதிஞ்சு போட்டு வருவம் எண்டுவெளிக்கிட்டனான். இண்டைக்குசனிக்கிழமை அவங்கள்இரண்டு மணி எண்டால் பூட்டிப்போடுவாங்கள்'

''உனக்கு ரியுசன் முடிஞ்சுதே .........

''ஓ...... நான் இனிமேல் ரியுசனுக்கு போகேல்லை''

சுமதியின் குரல் தளதளத்தது. கண்களில் இருந்து மளமளவென்று கண்ணீர் வடிந்தது. ''ஏன்பிள்ளை......ஏன் என்ன, என்ன நடந்தது... ஐயோ என்ன நடந்தது எண்டு சொல்ல'' தந்தையின் பதை பதைப்பைக் கண்ட சுமதி தன்னைக் கட்டுப்படுத்த முயன்றாள்.

'' இண்டைக்கும் அந்தக் கண்ணாடிக் காரன் காம்படியால வரேக்கை ஓடியாந்து சயிக்கிளைப் பிடிச்சிழுத்து நிப்பாட்டிப் போட்டான். பேரைச் சொல்லிக் கூப்பிடுகிறான்' பார்க்கிற சனம் நினைக்கும் அவளும் விட்டுட்டுத் தானே நிக்கிறாளெண்டு''

''அழாதை, அழுது இப்ப என்னத்தை செய்யிறது. கொம்மா விடியவும் சொன்னவ அவளைக் கொண்டே கொஞ்சநாளைக்கு மானிப்பாயில் விடுங்கோ எண்டு. அவனை நீ ஒண்டும் பேசேல்லையே .........?''

'' எனக்கு கோபம் வந்திட்டுது எடபுட எண்டு பேசிப்போட்டன். நடு ரோட்டில விட்டு ... என்னை அடிச்சுப் போட்டான் நான் இனி அந்தப்பக்கம் போகமாட்டன்''

'' சரி......சரி...... அழாதை ..... கவனமா வீட்டை போ எல்லாத்துக்கும் நான் வாறன்''

'' ஐயா நீங்கள் அவங்கடை காம்படி பக்கம் போயிடாதேயுங்கோ. என்னிலை இருக்கிற ஆத்திரத்தில உங்களை ஏதும் செய்தாலும் செய்து போடுவாங்கள்.''

'' ஓமோம் நீ......... கவனமாப் போ...

சுமதி கண்களை தேய்த்துத் துடைத்தாள்...... அவளின் உணர்வு வேகத்தையும் மீறிக் கொண்டு அந்த நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது. கண்ணீர் வருவதற்கு ஆயத்தமாக கண்கள் எரிந்தது, கண்களை இறுக மூடி கண்ணீரைக் கட்டுப்படுத்தினாள். நினைவுகளை விழுங்கிக் கொண்டு சயிக்கிளைச் செலுத்தினாள்.

திடுக்குற்று விழித்த சுமதிக்கு தான் மேசையிலே தூங்கி விட்டதை நினைக்க வேதனையாக இருந்தது. விரித்துக்கிடந்த புத்தகத்தின் மீதே படுத்து விட்டதால் அதன் பக்கங்கள் சில கசங்கி மடிந்து கிடந்தன. மேசை சிறிதாக இருந்ததால் இரண்டு பேர் ஒரே நேரத்தில் உட்கார்ந்து படிக்க முடியாது. ஒரே ஒரு கதிரைதான் இருந்தது. சுமதியின் தம்பி ரூபன் ஒரு பெரிய மரப்பெட்டியின் மேல் புத்தகங்களைப் பரப்பிவைத்து விட்டு ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். அவன் உக்காந்திருந்த அந்த பழைய ஸ்டூலில் ஒரு காலின் கீழ்ப்பகுதி உடைந்திருந்ததால் ஆட்டங் காட்டிக் கொண்டிருந்தது. அடிக்கடி விழப் போனான்.

தங்கை சுகந்தி ஒரு பாயில் படுத்திருந்தபடி எதையோ பாடம் பண்ணிக் கொண்டிருந்தாள். இடையிடையே தலையை சரித்து இவளை பார்த்தாள். இவள் சிரித்த போதும் அவள் சிரிக்கவில்லை வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தாள் பின் மீண்டும் புத்தகத்தைப் பார்த்தாள்.

படிப்பதிலே கண்ணாய் இருப்பதால் சூழல் அசைவுகள் அவளைப் பாதிக்கவில்லை என்று சுமதி நினைத்துக் கொண்டாள்.

கணிதபாடத்தில் ஏதோ கேள்வி கேட்டு வந்த தம்பியை ஏசவும் மனமில்லாமல் ஏதோ சாக்கு சொல்லி திருப்பி அனுப்பினாள்.

தானும் வெறுமனே புத்தகத்தை திறந்து வைத்திருந்தாளே ஒழிய அவளால் படிக்க முடியவில்லை. இனிமேல் படிப்பு எவ்வளவு தூரம் சாத்தியப்படுமென்பதை அவளால் ஜீரணிக்க முடியவில்லை.

'சிக்...... இதிலை இருந்து கொட்டாவி விடுறதை விட பேசாமல் போய் படுக்கலாம்....... இன்னும் 8 மணியே ஆகேல்ல படுத்தா ஐயா என்ன நினைப்பார்? அம்மாக்கென்ன...... அவா சுகமாச் சொல்லிப் போட்டா மானிப்பாயில் போய் நிக்கச் சொல்லி இஞ்ச ரியுசனுக்கு போகாததால நான் படப்போற பாடு அவவுக்கு விளங்குமே......'

இவ்வளவுக்கும் காரணமே அந்தக் கும்பல் என்பதை நினைக்கவே சுமதிக்கு கோபம் கொதித்துக் கொண்டு வந்தது.

' எளியவங்கள் எத்தினை பேற்றை படிப்பை நாசமாக்கிறாங்கள்...... படிப்பென்ன வாழ்க்கையே நாசந்தானே......... உவங்கள் கடத்திக் கொண்டு போய் கலியாணங் கட்டினதுகளின்ர கெதி என்ன... நாளைக்கு இந்தியாக்காரன் போக அவங்களும் ஓடி ஒழிச்சிடுவாங்கள் அதுகள் ஆத்தலய வேண்டியது தான் '

'' ஏன் பிள்ளை ஏதும் தலையிடி சுகமில்லை எண்டாப் போய்ப்படன். பிறகேன் உதில இருந்து ஜோசிச்சுக் கொண்டிருக்கிறாய்?''

சரமாகக் கண்களைத் துடைத்தாள். வாசு கியைப் பார்த்து முறுவலித்தாள். அவளின் உதடுகளின் துடிப்பையும் கண்களில் தெரிந்த சோகத்தையும் நொடிப்பொழுதில் கண்டுகொண்ட வாசுகி புகனம்மாமி எதை யோ எண்ணி வேதனைப் படுகிறாள் என் பதைப் புரிந்து கொண்டாள்.

''என்டைபிள்ளை ஏனடா வந்தனீ? அங்கை எல்லாரும் நிக்கினம் நிண்டு பாக் காதையுமன். காவேரியும் ஆசைப்படுவள்.''

தனது மகளுக்கு தான் ஆசையாக அபூர்வமாகச் செய்யும் கொண்டாட்டங் களில் எல்லோரும் பங்குபற்றி சந்தோசப் படவேண்டும். குறிப்பாக மகளின் வயதை யொத்தவர்கள் அவளின் சிநேகிதிகள் பங்கு கொள்ளும் போது அவள் படும் சந்தோ ஷத்தை கண்டுகளிக்க விரும்பும் ஒரு தாயின் ஏக்கம் அவள் வார்த்தையில் தொனித்தது.

ஆனாலும் அந்தத் தாய் ஏன் இங்கே தனியாக நின்றாள். ஏன் அழுதாள் என்பது தான் வாசுகிக்கு சங்கடமாகவிருந்தது. இந்த சந்தோஷமான நாளில் எல்லாவற் றையும் முன்னின்று செய்யவேண்டியவள் இவள் தானே. இவளுக்குத்தானே அந்தச் சந்தோசத்தில் அதிக உரிமை இருக்கிறது பிறகேன் இவள் இப்படி தனியாக இங்கே? காலையில் கூட இவள் அவ்வளவாக முன் பக்கம் வரவில்லை. அடுப்படி வேலைகளில் தான் மும்முரமாக நின்றாள். ஓடியாடி எல்லா வேலைகளையும் தானேதான் முன் னின்று செய்தாள். ஒருவேளை நகைநட்டு ஏதும் இல்லையென்றோ......? சீ......அதற் காகவாயிருக்காது. சங்கிலி காப்புத்தான் இங்கே எத்தனை பேரிடம் வாங்கலாம். வாசுகி தன் ஆராய்ச்சிகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

''இல்லை மாமி நான் அங்கை போகப் போறன் தலையிடிச்சாப் போலை எப்ப னுக்கு இருந்திட்டுப் போவமெண்டு வந்த னான்.''

''ஆ ஆ...... அப்பிடி அந்தப் பாயைப் போட்டுட்டு எப்பனுக்குப் படு மோனை இனித்தான் படமெடுக்கிறதாக்கும் நீயும்போய் அவளோடை நிண்டு நாலைஞ்சு படத்தை எடுபிள்ளை. அவள் நெடுகச் சொல்றவள் வாசுகியக்காவோடை நிண்டு படமெடுக்கவேணும் எண்டு.''

''அது சரி நீங்கள் ஏன் மாமி அங்கை போகாம இஞ்ச நிக்கிறியள்?'' வாசுகி இழுத்தடிக்காமல் தன் சந்தேகத்தைக் கேட்டு விட்டாள்.

புகனம் மாமியின் கண்கள் கலங்கியது. ''இல்லைப்பிள்ளை ஒரு நல்ல நாள் பெரு நாள்ளை அதுவும் வாழுறவயசிலை ஒருபிள் ளைக்கு நடக்கிற நல்ல காரியத்திலை நான் என்னண்டு பிள்ளை முன்னுக்குப் போய் நிக்கிறது?''

''என்ன மாமி நீங்கள் சொல்றது விளங் கேலை ஏன் உங்களுக்கு என்ன நடந்தது?''

''நீ குழந்தைப் பிள்ளை ஒன்றும் விளங் காது நான் புருசனைச் சாகக் குடுத்தனான் உந்த நல்லகாரியங்களுக்கு முன்னாலை போய் நிக்கக்கூடாது. நாளைக்கு அவளுக் கொண்டெண்டா என்னாலை தாங்கே லாது. சனம் என்னைத்தான் திட்டும்''.

''ஏன் மாமா செத்ததுக்கும் காவே ரீன்டை சாமத்தியச் சடங்கிற்கும் அவ ளின்டை எதிர்காலத்திக்கும் என்ன சம் பந்தம்?''

''இல்லைப்பிள்ளை அது உலக நடப்பு. புரியனைச் சாகக் குடுத்த பொம்பிளையள் நல்லகாரியங்கள் நடக்கேக்கை முன்னாலை போகக்கூடாது. அதுதான் மோனை நான் இஞ்ச நிண்டு பாத்தனான்.'' புகனம் குரல் தழதழக்கக் கூறி முடித்தாள்.

நாசமாய்ப் போன உலகம் மனைவியை இழந்த எத்தனை கணவன்மார் அங்கே நிற்கிறார்கள். பெற்றதாய் கணவனை இழந்த ஒரே காரணத்திற்காக மகளை முன்னால் நின்று பார்க்கக் கூடாதாம். எவ் வளவு மோசமான மூடநம்பிக்கை, கொடு மையான சமுதாய அடக்குமுறை. இந்த சமுதாயத்தின் நடத்தைகள் பெண்களை அவர்களின் உணர்வுகள் ஆசாபாசங்களை எவ்வளவு மோசமாகப் பாதிக்கின்றன.

அக்கா பெரியவளாகி இருந்தபோது கூட அம்மா ஒரு பெரிய திருவிழாவே நடத்தி முடித்தாள். வாசுகிக்கு இது துண்

டாகப் பிடிக்கவில்லை. பெண்களுக்கு இயற்கையாக ஏற்படும் நிகழ்ச்சியை ஏன் பறை சாற்ற வேண்டும்? ஒருவேளை கலியாண வயதில் என்னிடம் ஒரு பிள்ளை இருக்கிறாளென்பதை அறிவிக்கும் நிகழ்ச்சியோ என்னவோ.........? நான்கு நாட்களாகக் கொண்டாட்டம். வீடு முழுவதும் உறவினர் கூட்டம். அக்காவின் வயதையொத்தவர்கள் ஏற்கனவே பெரியவளாகி விட்டவர்கள். அக்காவை ஏதேதோ சொல்லிக் கிண்டல் பண்ணினார்கள். பையன்கள் புதிதாகப் பார்ப்பதுபோல் அக்காவைப் பார்த்தார்கள். அதன்பின்னர் அந்தப் பையன்களுடன் எல்லாம் அக்கா நேருக்கு நேராகக் கதைப்பதில்லை.

வாசுகிக்கோ அந்த நான்கு நாட்களும் வெளியேவரக்கூடப் பிடிக்கவில்லை. அம்மா மீதுதான் ஆத்திரப்பட்டாள்.

"எங்கையோ ஒரு கழுதை எனக்கெண்டு வந்து வாச்சுது. ஒரு நல்லநாள் பெருநாள் எண்டில்லை மூஞ்சையை நீட்டிக்கொண்டு திரியுது உதோடை என்னண்டுதான் காலந்தள்ளப் போறனோ தெரியேலை. பொம்பிளைப் பிள்ளையெண்டு ஒரு மனிசற்றை சொல்லுப் பறைஞ்சது கேக்கிறதே தன்னரசுக்குத் திரியநிக்கிறாள்".

அம்மாவோ வந்துபோன உறவினர்களிடம் எல்லாம் சொல்லித் திட்டினாள். அக்கா கூட வாசுகியை ஒரு மாதிரிப்பார்த்தாள். 'ஏன் தான் இவள் இப்படி ஒரு பெண்ணுக்குரிய அடக்கமே இல்லாமல் ...?

ஒருவாறு எல்லாம் முடிந்தது. அதன் பின்னர் அக்கா வெளியே செல்வதே மிகக் குறைவு. வெளியே போக நேர்ந்த போதெல்லாம் அம்மா தான் கூட்டிப் போனாள். தனக்கு முடியாத போது மட்டும் மாமியோடு அனுப்பினாள்.

அண்ணாவோ எப்போதும் தனியாகத்தான் போனான் சுதந்திரமாகவே சுற்றினான். நண்பர்களோடு படம் பார்க்கச் சென்றான்.நேரங்கழித்துவீட்டுக்குவந்தான்.

அப்பாவும் அண்ணாவைப் போலத்தான். சிலநேரங்களில் அம்மாவோடு சண்டை கூடப் போட்டார் அடிக்கவும் செய்தார். அம்மா தனியாகப் போயிருந்து அழுவாள். இரண்டு மூன்று நாட்களித்ததும் மீண்டும் வழமை போலவே வீட்டிற்குள் உலா வந்தாள். அம்மா வெளியே எங்கும் போவதில்லை. மிஞ்சி மிஞ்சிப் போனால் தேர்ட்டமும் வீடுந்தான்.

அக்கா சயிக்கிளோட்டக் கற்றுக்கொள்ள ஆசைப்பட்டாள். அம்மாவோ ஒரேயடியாக மறுத்து விட்டாள். அக்கா பின்பும் இரண்டு மூன்றுதடவை கேட்டாள். உஹூம் அம்மா இசையவேயில்லை. அக்கா வேதனையோடு விட்டு விட்டாள். வாசுகியோ அம்மாவை எதுவும் கேட்கவில்லை. அம்மாவுக்குத் தெரியாமல் அண்ணா இல்லாத வேளைகளில் அவனின் சயிக்கிளை எடுத்து ஓட்டிப் பாத்தாள். பலதடவை சயிக்கிளோடு விழுந்து விட்டாள். சயிக்கிளில் நிறைய சிராய்ப்புக்கள். அண்ணாவுக்கு தெரிந்த போது வாசுகிக்கு நல்ல அடி விழுந்தது. அம்மா வாயில் வந்தபடியெல்லாம் திட்டினாள். எது நடந்தாலும் வாசுகி திருட்டுத்தனமாக ஓடத்தான் செய்தாள். இப்பொழுது அவள் ஓரளவு தூரம் விழாமல் ஓடுவாள்.

மாசிமாதம் ஊர்க் கோயிலில் திருவிழா தொடங்கியது. இந்த நாட்டில் அமைதி நிலவுவதே அரிது எப்போ பார்த்தாலும் குளப்பங்கள் கலவரங்கள். சூட்டுச் சத்தங்கள், செல் அதிர்வுகள், மரண ஓலங்கள். இத்தகைய ஒருநாட்டில் எப்படியோ ஒரு அமைதி ஏற்பட்டு அந்த அமைதியான சூழ்நிலையில் கோவிலில் திருவிழா தொடங்குகிறதெண்டால் சனங்களின் குதூகலத்திற்கு கேட்கவா வேண்டும்? பக்தியினாலோ பகட்டுக்காகவோ என்னவோ ஊர்ச்சனங்கள் அள்ளு கொள்ளையாக கோவிலை நோக்கிப் படையெடுத்தது. சிறுவர்கள் பாடசாலைக்குப் போகாமல் கோவிலையே சுற்றிச்சுற்றி வந்தார்கள். காப்புக் கடைகளும் கடலைக்கடைகளும் வேறு விற்பனை நிலையங்களும் கோயிலைச் சுற்றி முளைத்தன. பெண்களோ பட்டுப்புடவை சரசரக்க கைகழுத்தெல்லாம் நகையணிந்து காலையும் மாலையும் கோயிலுக்குச் சென்றார்கள்.

வாசுகி ஒழுங்காகப் பாடசாலைக்குச் சென்றாள். இரவிலும் அவள் கோவிலுக்குப் போவதில் அவ்வளவு ஆர்வம் காட்ட வில்லை. அக்காவோ ஒவ்வொருநாளும் இரவில் தவறாமல் கோவிலுக்குச் சென் றாள். சிலநாட்கள் பாடசாலையை நிறுத்தி விட்டு பகலிலும் சென்று வந்தாள். அக்கா ஒவ்வொரு நாளும் விரதம் இருந்தாள். தினமும் நேரத்தோடு சமைத்து விட்டு அம்மாவும் கோவிலுக்குப்போனாள். கோயி லில் அம்மா அடுக்களைக்குத் தேவையான புதிய புதிய பாத்திரங்கள் எல்லாம் வாங்கி வந்தா.

பன்னிரண்டாம் நாள் தேர்த்திருவிழா அக்கா காலையிலேயே எழுந்து முழுகினாள். அம்மா வாசுகியையும் எவ்வளவோ வற்பு றுத்தினா. அவளோ நேற்றுக் குளித்ததாகக் கூறி குளிக்க மறுத்து விட்டாள். வாசுகி அம்மாவின்திட்டுத்தாளாதுமுழுப்பாவாடை சட்டை அணிந்தாள். அக்கா சேலை கட்டி னாள். அன்றுதான் அவள் முதன்முதலாக சேலைகட்டிக் கொண்டு வெளியே செல்லப் போகிறாள். அதிகமாகவே வெக்கப்பட் டாள். ஆரம்பத்தில் அம்மா தான் சேலை கட்டி விடுவதாக இருந்தது. ஆனால் அக்காவுக்கு அது திருப்தி இல்லாமல் இருந் திருக்க வேண்டும். அடிக்கடி முகத்தை சுழித்தாள் சிக்......சிக் என்று அம்மாவை ஏசினாள். அரையுங்குறையுமாகக் கட்டப் பட்ட சேலையை அள்ளிக் கொண்டு அந்த அறைக்கும் இந்த அறைக்கும் ஓடினாள். கடைசியில் அம்மா கலாக்காவை கூட்டிக் கொண்டு வரப் போனாள்...

வாசுகியின் வீட்டிற்கு கிழக்குப் புற மாக இரண்டு வீடுகள் தள்ளி இருந்தது கலாக்காவின் வீடு. இந்த ஊரில் நடை பெறும் பெரும்பாலான திருமண வைபவங் கள் கொண்டாட்டங்களின் போது பெண் களை அலங்கரிக்க எல்லோரும் கலாக்கா வைத் தான் அழைப்பார்கள். கலாக்கா விற்கு இப்போது இருபத்தொன்பது வய தாகிறது. ஆனால் இன்னமும் திருமணமாக வில்லை. அவரின் இரண்டு தங்கைகள் திருமணம் செய்து கொண்டு விட்டார்கள். தாய் இல்லை வயது போன தந்தையோ டும் ஒரு தம்பியோடும் தான் வீட்டில் இருக்கிறார். கைவேலைகள் நன்றாக செய் வார். எல்லாவற்றிலுமே கெட்டிக்காரிதான்.

கலாக்காவின் ஒரு அண்ணா திருமண மாகி ஜெர்மனியில் இருக்கிறான். இவாவை அங்கே வரும்படி எவ்வளவோ வற்புறுத் தினார். இவா மறுத்து விட்டா. வேறு ஒரு அக்கா ஒரு அண்ணா கலியாணம் முடித்து ஊரோடு இருக்கிறார்கள். கலாக்காவிற்கு பல தடவை திருமணம் பேசி வந்தது. சிலர் பெண்ணைக் கூட வந்து பார்த்து விட்டுப் போனார்கள். ஆனால் கல்யாணம் நடக்க வில்லை. கலாககாவிற்கு அஸ்மா நோய் இருக்கிறது. அஸ்மா நோயுள்ள பெண் ணைத் திருமணம் செய்யக்கூடாதாம் சீ... .... என்ன மனிதர்கள். பெண்களில் எவ் வளவு நுட்பமாகப் பிழை பிடிக்கிறார்கள்.

அம்மாவுக்கோ குசினிக்குள் இருப்புக் கொள்ளவில்லை. அக்காவுக்கு சேலை கட்டு வதை அடிக்கடி வந்து பார்த்தாள். இப் படிச் செருகு அப்படி இழு என்றாள் அக்கா ஏசினாள். கலாக்கா சிரித்தா. அம்மா அவசர அவசரமாகப் போய் பக்கத்து வீட் டில் பிறேமாவிடம் கட்டும்படி கொடுத் திருந்த கனகாம்பர மாலையை வாங்கி வந் தாள். அக்காவின் தலையில் வைத்து அழகு பார்த்தாள். கலாக்கா அதனை வாங்கி சீராக வைத்தாள். அதற்கிடையில் குசினியில் ஏதோ எரிந்து மணக்கவே அம்மா எல்லாவற்றையும் விலக்கிக் கொண்டு அங்கே ஓடினாள். ஒருவாறு அக்காவுக்கு சேலை கட்டி முடிந்தது.

அடுப்படிக்குள் இருந்தபடி அம்மா எட்டிப் பார்த்தாள். அம்மாவின் முகத்தில் ஆனந்தம் பொங்கியது. ஒரு சோடி காப்பும் ஒரு சங்கிலியும் கொண்டு வந்து வாசுகியிடம் கொடுத்தாள் அம்மா. வாசுகி துண்டாக மறுத்தாள். அம்மா கெஞ்சிப் பார்த்தாள் பின் ஆத்திரத்தில் கத்தினாள். அக்கா விடம் காப்பைக் கொடுத்தாள். அக்கா இப்போது இரண்டு சோடி காப்பும் அட் டியலும் அணிந்திருக்கிறாள். அக்கா கண் ணுக்கு மை பூசினாள். உதட்டுக்கும் சாயம் பூசினாள். அவளைப் பார்க்க அழகாகத் தான் இருந்தது. அதற்காக இப்படியெல் லாம் செய்ய வேண்டுமென்றில்லை. அம்மா

வுக்கு அக்காவைப் பிடித்தது. வாசுகியைப் பார்த்தபோது தான் முறைத்தாள். புறு புறுத்தாள். ''பார் பார் அது போற கோலத்தை ஒண்டுக்கும் வழியில்லாததுகள் மாதிரி மூளி மாதிரி வெறுங் கழுத்தோடை போகுது...

அம்மா பேசிக்கொண்டிருக்கும் போதே மாமி வந்தாள். இந்த மாமியோடுதான் அக்கா தினமும் கோயிலுக்குப் போவாள். இப்போதும் அதற்காகத்தான் வந்திருக்கிறாள். மாமியும் மிகவும் ஆடம்பரமாகத்தான் வந்திருந்தாள். அம்மா மாமியிடம் வாசுகியைப் பற்றிக் கூறினாள். வாசுகிக்கோ ஆத்திரம் எல்லை மீறியது. எல்லாவற்றையும் கழட்டி எறிந்து விட்டு கோவிலுக்குப் போகாமல் நிக்க நினைத்தாள்.

''ஏன் பிள்ளை வெளிக்கிட்டா வாவன் நேரமெல்லே போகுது'' மாமி அக்காவை அழைக்கவே வேறு வழியில்லாமல் வாசுகியும் பின் தொடர்ந்தாள்.

கோயிலில் கடலலை போல சனம் திரண்டிருந்தது. உள்வீதி வெளிவீதி எங்கும் ஒரே சனக்கூட்டம். ஒற்றைக்காலைத் தூக்கினால் திரும்ப வைக்க முடியாது அவ்வளவு நெரிசல் அத்தோடு ஒலிபெருக்கியின் அநாவசியமான சத்தமும் சேர்ந்து வெறுப்பை ஏற்படுத்தியது.

மத்தியானம் 11 மணியளவில் சுவாமி சுற்றி முடிந்து தேர் வாசலடிக்கு வந்தது. 2 மணிக்குத்தான் சுவாமியைத் தேரிலிருந்து இறக்குவார்களாம். ஒலிபெருக்கி அலறியது.

''மாமி நாங்கள் போட்டு பிறகு வருவமே சுவாமி இறக்கிறது பார்க்க?'' அக்கா மாமியைக் கேட்டாள். மாமியும் அதற்கு ஒப்புக் கொண்டாள். வாசுகிக்கு அப்பாடா என்றிருந்தது. அக்கா ஏதோ சாமான்கள் வாங்க கடைக்கு வரும்படி அழைத்தாள். முதலில் ஐஸ்பழம் குடிப்பதற்காக வானடிக்குச் சென்றார்கள்.

ஐஸ்ப்பழ வானைச் சுற்றி ஒரே சனக் கூட்டம் சிறுவர்களோடு பெரியவர்களும் போட்டி போட்டுக் கொண்டு நின்றார்கள். வானடியில் நின்று ஐஸ்கிறீம் குடித்துக் கொண்டிருந்த நான்கைந்து இளைஞர்கள் இவர்களையே பார்த்தார்கள். உஹூம் அக்காவைப் பார்த்தார்கள். வாசுகி திரும்பி அக்காவின் முகத்தைப் பார்த்தாள். அக்கா பேசாமல் நடந்து வந்து கொண்டிருந்தாள்.

வானுக்கு சற்றுத் தூரத்தில் நின்று கொண்டு மாமி ஐஸ் கிறீம் வாங்கி வரும்படி வாசுகியை அனுப்பினாள். வாசுகி வாங்குவதைக் கண்ட அந்த இளைஞர்களில் ஒருவன் தானும் வந்து வாங்கினான். ஐஸ்பழத்தில் ஒன்றை வாசுகியிடம் நீட்டி ''ம் ... இதை அக்காட்டைக் குடுங்கோ'' என்றான். வாசுகிக்கு சுரீரென்றது. ''இவனேன் இப்படிச் செய்கிறான்? ஒரு வேளை அக்காவைத் தெரியுமோ, அப்படியானால் நேராகப் போய் அக்காவிடம் கொடுக்க வேண்டியது தானே.''

''என்ன யோசிக்கிறியள் உங்கடை அக்காதானே அவா'' அவன் மீண்டும் கேட்டான். ''பின்னேரமும் வருவியளே'' வாசுகிக்கு அவன் கேள்விகள் சந்தேகத்தை உண்டு பண்ணியது. ''இவன் வேறையேதோ நோக்கோடு வந்து நிக்கிறான் வாசுகிக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது ''எளிய மூதேசிகள் உதுக்குத்தான் வாறது களாக்கும்'' அவனைப் பிய்த்து விளக்கபோல் வந்தது. பல்லைக் கடித்துக் கொண்டு ஐஸ் பழத்தை வாங்கிக் கொண்டு போனாள்.

அக்கா காப்புக்கடைப் பக்கம்போனாள் கண்ணாடி வளையல்கள் வாங்கினாள். மாலை வாங்கினாள் ஐட்டெக்ஸ் குய்ட்டெக்ஸ் எல்லாம் வாங்கினாள். இவை யெல்லாம் ஏற்கனவே அக்காவிடம் வீட்டில் இருப்பவை தான். இருந்தும் வாங்கினாள். ஆசை ஆரைத்தான் விட்டது.

''என்ன வாசுகி உனக்கொண்டும் வேண்டாமே கொக்கா வேண்டுறாள். வேண்டன்.''

மாமி அடிக்கடி கூறினாள். வாசுகிக்கு அங்கிருந்த எந்தப் பொருளும் தேவையான தாகப் படவில்லை. வாசுகி மற்றைய கடைகளையும் நோட்டம் விட்டாள்.

அப்போது தான் வந்திருக்க வேண்டும் இவர்கள் நின்ற கடைக்கு வலப்பக்கக் கடையில் அந்த நான்கு இளைஞர்களும் நின்றிருந்தார்கள். ஆனால் அவர்கள்

சாமான் வேண்டுவதில் ஆர்வம் காட்டுவதாகத் தெரியவில்லை. கடைக்காரன் அடிக்கடி அது வேண்டுமா? இது வேண்டுமா? என்று கேட்டான். ஆனால் அவர்கள் அவனை அலட்சியம்பண்ணி விட்டு இங்கே தான் பார்த்தார்கள்.

கடைக்காரன் என்ன எண்ணினானோ அக்காவையும் அந்த இளைஞர்களையும் மாறி மாறிப் பார்த்தான். மாமி அவசரமாக அக்காவைக் கூட்டிக்கொண்டு அப்பால் கடலை வாங்குவதற்காகச் சென்றாள்.

அந்த இளைஞர்களும் வந்தார்கள். ஒருவன் அக்காவுக்குப் பக்கத்தில் வந்து நின்று கொண்டு கடலைவேண்ட அவசரப்படுவது போல் பாசாங்கு செய்தான். வாசுகி அக்காவைப் பார்த்தாள். அவளுக்கு வியர்ப்பது தெரிந்தது. அக்கா ஒருவாறு மாமிக்கு மறுபுறத்தில் வந்து நின்று கொண்டாள்.

'சனியன் சனியன் ஏன் இப்பிடிப் பயந்து ஓடுது? ஏதுஞ் சேட்டை விட்டாங்களெண்டா அதிலையே வைச்சு அடி அடியெண்டு அடிச்சு முறிச்சுப் போட்டுப் போடவேணும். நாங்கள் இப்பிடி இழுத்து மூடிக்கொண்டு ஒடி ஒளியத்தான் அவையளுக்கும் தங்களை விட்டா ஆளில்லை எண்ட நினைப்பு வாறது. வாசுகிக்கு இப்போது அக்கா மீது தான் கோபம் வந்தது. அக்காவோ 'நான் என்ன செய்ய' என்பது போல் வாசுகியைப் பார்த்தாள். மாமி அந்த இளைஞர்களை கூர்ந்து பார்த்தாள். அவள் முகத்தில் ஆத்திரமும் அருவருப்பும் தெரிந்தது.

ஒருவாறு எல்லாவற்றையும் கண்டு கழித்துக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டார்கள். சிறுவர்களின் விசில்சத்தமும் குழல்சத்தமும் வீதியின் வழமையான தன்மைகளை மாற்றியமைத்துக் கொண்டிருந்தன. அப்போது தான் வாங்கிய பலூன்களை சில சிறுவர்கள் வீதியிலேயே உடைத்துக் கொண்டு அழுதார்கள். பெற்றோர்களோ பின்னேரம் வாங்கித் தருவதாகக் கூறி அழ, அழ அவர்களை அழைத்துச் சென்றார்கள்.

மாமி தான் வாங்கியிருந்த அலுமினிய எவர்சில்வர் பாத்திரங்களை சுமந்து வருவதற்கு கஸ்டப்பட்டாள். சிலவற்றை வாசுகி வாங்கிக் கொண்டாள். பின்னால் வந்த சையிக்கிள் ஒன்று தொடர்ச்சியாக மணியடித்தது. வீதியால் போனவர்களில் பெரும்பாலானவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். அக்காவும் வாசுகியும் மாமியும் கூட பார்த்தார்கள். வந்தது வேறு யாருமல்ல. அந்த நான்கு இளைஞர்களுந்தான் வாசுகிக்கு இப்போது அக்கா மீதுதான் சந்தேகம் வந்தது. 'ஒருவன் அக்காவைப் பார்த்துச் சிரித்தான்.' அக்கா உடனடியாகத் தலையைக் குனிந்து கொண்டாள். 'வடிவாய்த் தான் இருக்கு' என்றான் இன்னொருவன்' 'வீடு தெரியுமேடா' மற்றொருவன் கேட்டான். திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு போனார்கள். இத்தனைக்கும் அக்கா நிமிரவேயில்லை.

வீதியால் போனவர்கள் சிலர் அக்காவைத் திரும்பிப் பார்த்தார்கள். வேறு சிலர் 'இதென்ன பெரிய புதினமே பெட்டையளைக் கண்டா சிலதுகளுக்கு உதுதானே வேலை' என்பது போல் தம்பாட்டில் நடந்தார்கள். எங்கையோ வம்பிலை பிறந்ததுகள் நாலு போடு போட்டு வீட்டிலை இருத்த ஆக்கள் இல்லை. ஆன தாய் தேப்பனுக்குப் பிறந்ததுகள் எண்டா உப்பிடிச் செய்யுங்களே'' மாமி எங்கள் மேல் பிரச்சனை இல்லை என்பது போல் நாலுபேருக்குக் கேட்க உரத்துக் கூறினாள்.

போனவர்கள் சிறிதுதூரம் சென்று விட்டு மீண்டும் திரும்பி வந்தார்கள். தூரத்தில் கண்டதுமே அக்கா தலையைக் குனிந்து கொண்டாள். இவர்களின்சேட்டைகளைப் பார்த்துக் கொண்டு பேசாமல் போவதை நினைக்க வாசுகிக்கு தன் மீதே ஆத்திரமும் வெறுப்பும் வந்தது. மாமி அவர்களை ஏதோ பேசப் போவது போல் ஆயத்தப்படுத்தினாலும் தங்களைத் தாண்டிச் சென்றபோது பேசாமல் இருந்தாள்.

வீட்டிற்கு வந்ததும் அக்கா எதுவும் நடவாதது போல் இருந்தாள். வாசுகிக்கு ஒரே குழப்பம். ஏன்தான் இந்தப் பையன்கள் பெண்களைக் கண்டால் இப்படி அலைகிறார்கள். ஊஹூம் ஒட்டு மொத்தமாக எல்லாப் பையன்களையும் குறை கூறி விட முடியாது. ஆனாலும் இந்த சமுதாயம்

இதைப் பார்த்துக் கொண்டு தானே இருக்கிறது. ஆண்களுக்கு பணிவிடை செய்பவர்கள் என்றல்லவா பெண்களை நினைக்கிறது. எப்படித்தான் இதைப் பெண்களால் ஏற்றுக் கொள்ள முடிகிறது? அவர்கள் நையாண்டி பண்ணவும் நாங்கள் தலையைக் குனிந்து கொண்டு செல்லவும் அவ்வளவுக்கு நாம் என்ன தப்புச் செய்தோம்...... வாசுகியால் இந்த சமுதாயத்தின் போக்கை ஏற்கவே முடியவில்லை.

இப்படித்தான் ஒருநாள் வாசுகியும் அக்காவும் பாடசாலை விட்டு வந்தார்கள். வீடு வழமையை விட அமைதியாக இருந்தது. அக்கா சாப்பிடுவதற்காகக் குசினிக்குள் போனாள். அம்மா நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை எழுந்து வெளியே வந்து விட்டாள். வாசுகிக்கோ அம்மாவின் முகத்தைப் பார்க்கவே பயமாக இருந்தது. ஆனாலும் அவள் எதையும் கண்டு கொள்ளாதவள் போல் இருந்து விட்டாள். அக்காவுக்கோ சாப்பாடு உள்ளே இறங்கவில்லை. பேசாமல் கையை அலம்பி விட்டு வெளியே வந்தாள்.

'' யேய் வாடி இஞ்ச '' அம்மா காத்திருந்தவள் போல் அக்காவைப் பார்த்துக் கத்தினாள். அம்மா ஒருநாள்கூட இப்படிக் கோபப்பட்டு அக்காவோடு கதைத்ததில்லை. ஆனால் வாசுகியோடு தினமும் இப்படித் தான் சண்டை போடுவாள். அம்மாவின் அரட்டலைத் தாங்க முடியாமல் அக்கா அழத் தொடங்கி விட்டாள்.'' என்னடி அழுது மாயம் போடுறாய்? உன்னைப் பள்ளிக்கூடத்துக்கு படிக்க விட்டனானோ இல்லாட்டி ஆடவிட்டனானோ? அவனாரெடி உனக்குக் கடிதம் போட்டவன் ''? அக்கா பலமாக அழத்தொடங்கி விட்டாள். ' உண்மையிலேயே அக்கா இப்படிச் செய்திருப்பாளா? வாசுகிக்கு ஒரே குழப்பம். '' என்னடி அது நான் கேக்கிறன் நீ பேசாமல் நிக்கிறாய்?

அம்மா ஆவேசமாக அதட்டினாள்.

''அ ......அ......அம்மா ச......ச .....சத்தியமா எனக்கொண்டுந் தெரியாது'' அக்கா பலத்த விம்மலினூடே கூறி முடித்தாள்.

'' என்னடி அது தெரியாது உன்ட புத்தகத்துக்கை தானே கடிதம் கிடந்தது. ஆருக்கு நீ காது குத்திறாய்?''

சிக்...... இவள் செய்வதையும் செய்து விட்டு பொய்வேறு பேசுகிறாள் ' வாசுகிக்கு அக்கா மீது ஆத்திரம் வந்தது. அக்காவோ அழுது வீங்கிய மூஞ்சையுடன் முழிசிக் கொண்டு நின்றாள்.

நடந்தது இவ்வளவு தான். பாடசாலையில் யாரோ ஒரு பையன் அக்காவிற்கு காதல் கடிதம் எழுதி அவளின் புத்தகத்திற்குள் வைத்திருக்கிறான். அவளுக்கு அது தெரியாது. வீட்டிற்கு வந்ததும் தேவைப் படாததாலோ என்னவோ அவள் அந்தப் புத்தகத்தை விரித்துப் பார்க்கவில்லை. மறு நாளும் அந்தப் புத்தகத்திற்குரிய பாடம் இல்லாததால் புத்தகத்தை வைத்துவிட்டுப் போய்விட்டாள். என்ன கஷ்டகாலமோ அன்று அண்ணாவும் வேலைக்குப் போகவில்லை. அவன் எதையோ தேடும்போது அவன் கைகளில் அந்தக் கடிதம் கிடைத்து விட்டது. அவ்வளவுதான் பெரிய ஆர்ப்பாட்டமே நடத்தி அம்மாவிடம் கடிதத்தை கொடுத்திருக்கிறான். அதன் வெளிப்பாடு தான் அம்மாவின் இந்த நடவடிக்கை.

அதன்பின் அக்கா எவ்வளவோ கூறியும் அம்மா கேட்கவில்லை. அக்காவைத் திட்டிக் கொண்டேயிருந்தாள். அண்ணாவும் வந்து அக்காவைப் பேசினான். மானமே போய்விட்டது என்று கத்தினான். அக்கா அறையைப் பூட்டிவிட்டு அழுதாள். அடுத்த நாள் அக்கா பள்ளிக்கூடம் போகவில்லை. தொடர்ந்து நாலைந்து நாட்கள் அம்மா மறித்து விட்டாள். வாசுகி அம்மாவை ஏசினாள். அம்மாவும் ஏசினா. '' நீ பேசாம இரு உன்னைப் போல அவளையும் ஆடவிடச் சொல்றியே. பொம்பிளைப்பிள்ளையளுக்குப் படிப்புத் தேவையில்லை. அவள் படிச்சது காணும் '' அம்மா ஒரேயடியாக மறுத்தாள். அதன் பின்னர் அக்கா பள்ளிக்கூடம் போகவேயில்லை.

இரண்டு வாரங்கள் கழிந்திருக்கும் அக்காவிற்காகக் காத்திருந்து ஏமாந்தானோ என்னவோ அக்காவிற்கு கடிதம் எழுதிய அந்தப் பையன் ஒழுங்கையால் போய்வரத் தொடங்கினான். போனவன் சும்மா போக

வில்லை. அக்கா நிக்கிறாளா என்று வேலிக்கு மேலால் அடிக்கடி எட்டிப் பார்த்தான். நாலைந்து நாட்களாக போய் வந்ததில் அம்மா அவனை இனங்கண்டு விட்டாள்.

அவ்வளவு தான் அடுத்த நாள் ஒழுங்கையால் கிடுகுவண்டில் வந்தது. அம்மா வண்டில்காரனை கூப்பிட்டாள். அவ்வளவு கிடுகுகளையும் பறிக்கச் செய்தாள். உடனடியாக ஆளைப்பிடித்து பிய்ந்து போயிருந்த வேலிகள் எல்லாவற்றையும் புதிதாக அடைப்பித்தாள். முன்பிருந்ததைவிட ஒரு வரி கிடுகு கூடவைத்து மேலே உயர்த்திக் கட்டினாள். கிணற்றடி வேலியை உயரமாகவும் கீழே நன்றாகப் பதித்தும் அடைத்தாள். அம்மாவுக்கு இப்போது ஓரளவு திருப்தி. ஆனாலும் பையன் வந்து போகிறானோ என்பதை கவனிக்கத் தவறவில்லை. அக்காவின் சிநேகிதிகள் வந்தபோது அவர்களைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஆனாலுமே மிகவும் எச்சரிக்கையாக இருந்தாள்.

அக்கா அதன் பின்னர் வெளியே எங்கும் போவதே இல்லை. ஆஸ்பத்திரிக்குப் போவதாக இருந்தாலன்றி. அவளுக்கு வெளியே போய்வர வேறு சந்தர்ப்பமே இல்லை. வாசுகி தான் அக்காவின் நிலையை எண்ணிக் கவலைப்பட்டாள். சிநேகிதிகளிடம் புத்தகங்கள் வாங்கி வந்து கொடுத்தாள். கிட்டத்தட்ட இரண்டு வருடங்கள் அக்கா இப்படித்தான் இருந்தாள். அம்மாவோடு சேர்ந்து தைக்கப் பழகியிருந்தாள். மாடுமுட்டி விழுத்தி அம்மாவுக்கு முதுகுப் பிடிப்பு வந்ததிலிருந்து இப்போது மூன்று நேரமும் அக்கா தான் சமைக்கிறாள்.

என்ன நினைத்தாளோ தெரியாது அம்மா திடீரென்று அக்காவுக்கு கலியாணப் பேச்சை ஆரம்பித்தாள். தனக்குத் தெரிந்த இரண்டொரு புறோக்கர்களிடம் சொல்லி வைத்தாள். நாலைந்து இடங்களில் அக்காவுக்கு கலியாணம் பேசி வந்தது. ஒருமுறை வந்து பெண்கூடப் பார்த்து விட்டுப் போனார்கள். ஆனாலும் சீதனத்தை பற்றி பேச்செழுந்த போது எல்லாமே குளம்பியது. அம்மா தினமும் அக்காவை எண்ணியே வேதனைப்பட்டாள். ஆனால் வாசுகிக்கோ வரவர அம்மா மீது ஆத்திரம் தான் அதிகரித்தது.

கடைசியாக அக்காவுக்கு ஒரு வெளிநாட்டுச் சம்பந்தம் பேசி வந்தது. மாப்பிளை கனடாவில் வேலை பார்க்கிறார். இப்போது மூன்று மாத லீவில் வந்து நிற்கிறார். போவதற்கிடையில் கலியாணத்தைக் கட்டி வைக்க பெற்றோர்கள் விரும்பினார்கள். பெற்றோர்கள் பெண்ணை வந்து பார்த்து விட்டுப் போனார்கள். திருமணம் முடிந்தவுடன் பெண்ணையும் கூட்டிக்கொண்டு தான் மாப்பிள்ளை போகப் போகிறாராம். இதனைச் சொன்ன போது அம்மா சிறிது தயங்கினாள். எப்படியும் திருமணம் நடந்தால் போதும் என்று உடன்பட்டாள்.

சீதனத்தைப் பற்றிப் பேச்செழுந்தது. முதலில் அவர்கள் சீதனத்தை விரும்பவில்லை. திருமணம் நடந்தால்ச் சரி என்றார்கள். மாப்பிளைக்குப் பொறுப்புகள் எதுவும் இல்லை. தாயும் தகப்பனும் தான். அம்மாவிற்கோ அக்காவை சும்மா அனுப்ப இஷ்டமில்லை. அவளை அவர்கள் துன்புறுத்தலாம் என நினைத்தாளோ என்னவோ அக்காவிற்கென வைத்திருந்த எல்லாவற்றையும் கொடுக்கத்தான் செய்தாள். 'வாசுகிக்கு பிறகு பார்க்கலாம்' என்றாள்.

திருமணம் முடிந்ததும் அக்கா அத்தான் வீட்டில் தான் இருந்தாள். சிறிது நாட்களில் கனடா போய் விடுவார்கள் என்பதால் அங்கேயே தங்கியிருக்கும்படி மாமி வற்புறுத்தியிருந்தார். அக்கா அடிக்கடி வீட்டிற்கு வந்து போனாள். அவளின்விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்ட நிலையில் திருமணம் நடந்திருந்தாலும் சந்தோசமாகத் தான் இருந்தாள்.

ஒரு மாதம் ஓடியிருக்கும். ஒருநாள் அக்கா வீட்டிற்கு வந்திருந்தாள். நீண்ட நேரமாக அம்மாவோடு கதைத்தாள். அவள் போனபின்னர் அம்மா எதையோ நினைத்துக் குறைபட்டுக் கொள்கிறாள் என்பது தெரிந்தது. விசாரித்த போது 'இப்போது கனடாவுக்கு அக்காவைக் கூட்டிச்செல்ல முடியாதாம். அத்தான் மட்டும்தான் போக முடியுமாம். அதனால் அத்தான் போய் இரண்டு மூன்று மாதம் கழித்து அக்காவைக்

கூப்பிடுவதாகக் கூறியிருக்கிறாராம்' என்று பின்னர் தெரிந்தது. இதன் பின்னரும் அக்கா இரண்டு மூன்று தடவை வந்து போனாள் ஆனால் முன்னரைப் போல சந்தோஷம் இல்லை.

காலை 7 மணியிருக்கும் வாசுகி அவசர அவசரமாகச் சமைத்துக் கொண்டிருந்தாள். பாடசாலைக்கு செல்வதற்கு முன் வாசுகி சமைத்து விட்டுப் போவதுதான் இப்போது வழக்கமாகி விட்டது. அம்மாவுக்கு முதுகுப்பிடிப்பு அவளால் காலையில் எழுந்திருக்க முடியாது. அப்பாவும் கொஞ்சம் முன்னர்தான் எழுந்து முகம் கழுவிக் கொண்டு வந்திருந்தார். வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அப்பா தான் எழுந்து சென்றார். அத்தானின் பெரியண்ணாவும் வேறு இருவரும் வந்திருந்தார்கள். அப்பாவோடு கதைத்தார்கள். அவர்களின் பேச்சில் பதட்டம் இருந்தது. அம்மா அவசர அவசரமாகக் கிணற்றடிக்குப் போனாள். வாசுகியால் போக முடியவில்லை. அடுப்பில் கறி கொதித்துக்கொண்டிருந்தது. வாசுகி யன்னலுக்கூடாகப் பார்த்தாள். என்டை ஐயோ......ஒ......ஒ அம்மா திடீரென்று குளறினாள். தலையிலடித்துக் கத்தினாள். வாசுகிக்கு கைகால் எல்லாம் தன்னையறியாமலே நடுங்கத்தொடங்கியது. கறியை அப்படியே விட்டுவிட்டு கேற்றடிக்கு ஓடினாள். அப்பா அழுதழுது அம்மாவைக் காரில் ஏறும்படி அவசரப்படுத்திக் கொண்டிருந்தார். அம்மா வாசுகியைக் கண்டதும் காரோடு தலையை மோதிக் கத்தினாள்.

''என்டை ஐயோ எடி வாசுகி கொக்கா மருந்து குடிச்சிட்டாளாம் ஐயோ நான் இனி என்ன செய்ய நான் இனி ஏன் இருப்பான் எனக்கும் மருந்தைத் தாங்கோடி''.

அம்மா அழுததற்கான காரணம் இவ்வளவு பயங்கரமாக இருக்குமென்று வாசுகி நினைக்கவேயில்லை. முன்னால் ஒரு இடி விழுந்து தாக்கியது போல் விறைத்துப் போய் நின்றாள். தனது உடலின் எந்த ஒரு பகுதியும் இயங்குவதாக வாசுகிக்குத் தோன்றவில்லை. சிலையாக நின்றாள்.

அத்தானின் அண்ணா வாசுகியிடம் வந்தார். நடந்த சம்பவத்தை விபரமாக விளக்கிக் கூறினார். கனவில் போல கேட்டுக் கொண்டிருந்தாள் வாசுகி. அதன்பின்னர் அத்தான் அவசரமாய்ப் போய் காரில் ஏற கார் விரைந்தது. நடந்து முடிந்த எவற்றையுமே வாசுகியால் ஜீரணிக்க முடியவில்லை.

'அப்போ அக்கா உண்மையிலேயே செத்துத்தான் போனாளா ....? ஐயோ இதை எப்படித்தான் அம்மா தாங்கப் போகிறா? அக்கா நீ ஏன் அக்கா இப்படிச் செய்தனி? நல்லாத்தானே இருந்தனி. சந்தோஷமாத்தானே வந்து போனனி. நஞ்சு குடிச்சு உயிரை விடுற அளவுக்கு அப்பிடி உனக்கு என்னக்கா நடந்தது.'

அயலவர்கள் கூடிவிட்டார்கள் வாசுகி அழுகையினூடே விக்கி விக்கி நடந்ததைக் கூறினாள். வாசுகியை ஆறுதல் கூறி அழைத்துப் போனார்கள்.

இதற்கிடையில் தகவலறிந்த அண்ணாவும் கார் பிடித்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போனான். ஆனால் அவன் போகு முன் பிரேதம் வீட்டுக்கு வந்துவிட்டது. அம்மா மண்ணில் புரண்டு கொண்டு அழுதாள். அப்பாவும் வழமைகளுக்கு மாறாக அதிகமாகவே அழுதார். சற்றைக்கெல்லாம் அண்ணா வந்தான். அக்காவின் மரணத்திற்கான காரணத்தை வீட்டாருக்குக் கூறியவன் அவன்தான்.

அத்தானுக்கு ஏற்கனவே திருமணமாகி மனைவியும் இரண்டு குழந்தைகளும் கனடாவில் இருக்கிறார்களாம். அவள் சாதியில் குறைந்தவள் என்றபடியால் அத்தான் வீட்டில் அந்தத் திருமணத்தை அங்கீகரிக்கவில்லை. இங்கே ஒரு திருமணத்தை செய்து வைத்தால் அவர் எப்படியும் அந்தப் பெண்ணை விட்டுவிடுவார் என்ற நம்பிக்கையில் வீட்டார் அவருக்கு கல்யாணம் பேசி இருக்கிறார்கள். அத்தானும் வீட்டுக்காரரின், வீட்டாரின் வற்புறுத்தலைத் தாங்கமுடியாமல் இந்தத் திருமணத்திற்கு உடன்பட்டிருக்கிறார். திருமணமும் முடிந்தது.

கனடாவிலுள்ள பெண்ணுக்கு இது எப்படியோ தெரிந்து விட்டது. உடனேயே அவள் இரண்டு பிள்ளைகளையும் கூட்டிக் கொண்டு புறப்பட்டு வந்துவிட்டாள். வீட்டிற்குப் போய் பெற்றோர்கள் உறவினர்களை அழைத்து வந்து அத்தான் வீட்டில்

பெரிய ஆர்ப்பாட்டமே பண்ணியிருக்கிறாள். அக்காவையும் கண்டபடி ஏசிவிட்டு வழக்குத் தொடரப் போவதாகக் கூறிச் சென்றிருக்கிறாள். அவள் போனபின்னர் அக்காவுக்கும் அத்தானுக்கும் சண்டை வந்து விட்டது. அத்தான் அக்காவுக்கு அடித்திருக்கிறார். உடனேயே வெளிக்கிட்டுப் போய் விட்டார். அதன் பின்னர் இரவு வெகுநேரமாகியும் அத்தான் வரவேயில்லை.

அதிகாலை மூன்று மணி இருக்கும் வெளியே ஏதோ சத்தம் கேட்டு அத்தானின் தாய் எழுந்து வந்து பார்த்த போது அக்கா வாந்தி எடுத்துக் கொண்டிருந்திருக்கிறாள். கேட்டதற்கு ஒன்றுமில்லை என்று கூறிவிட்டாள். பின்னர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகும் போதுதான் அரளிக்காய் சாப்பிட்டதாகக் கூறினாளாம். வழியிலேயே உயிர் பிரிந்து விட்டது.

அண்ணா இதைக் கூறி முடித்தபோது வாசுகி ஒரு முடிவுக்கு வந்தவள்போல எழுந்து அறைக்குள் சென்றாள். அதன் பின்னர் அவளுக்கு வெளியே வரவே பிடிக்கவில்லை.

'சீ...... அக்கா எடுத்தது எவ்வளவு கோழைத்தனமான முடிவு. தவறு செய்தவன் தண்டிக்கப் படவேண்டியவன் என்ன மாதிரித் திரிகிறான். அவனுக்கென்ன இன்னொரு திருமணத்தைச் செய்வான் இல்லாவிட்டால் அந்த மனைவியோடு வாழுவான். ஆனால் அக்கா இத்தனை காலமும் தான் வாழ்வில் என்ன சுகத்தைக் கண்டாள்? எல்லாருக்கும் பயந்து, பயந்து வாழ்ந்தது தான் மிச்சம்.

வெளியே அக்காவின் பிணத்தை சுடலைக்குக் கொண்டு செல்வதற்கான இறுதிக் கட்ட ஆரவாரம் நடக்கிறது. பலத்த சத்தமாக எல்லாரும் ஒப்பாரி சொல்லி அழுகிறார்கள். வாசுகியின் மனதில் திடீரென ஒரு தவிப்பு கடைசியாக அக்காவை ஒரு தடவை பார்த்து விடவேண்டும் என்ற ஆவல். அதற்கிடையில் புகனம் மாமி வாசுகியை அழைத்துப் போவதற்காக வந்து விட்டாள். சமூகத்தில் பெண்கள் படும் அவலங்களுக்கு அக்காவின் சாவால் நிச்சயம் ஒரு மாற்றம் ஏற்படப்போகிறது என்ற நம்பிக்கையோடு எதுவும் பேசாமல் புகனம் மாமியின் பின்னால் வாசுகி எழுந்து போகிறாள்.



தன் காலத்தேவையை மட்டும் நிறைவு செய்வதற்காகப் 'படைப்பாளி எழுதவேண்டுமென்றால் நான் பேனாவை முறித்து வீசி எறிந்து விடுவதற்கும் தயங்க மாட்டேன்.

— விக்டர் யூகோ

# சமகால கண்ணோட்டம்

ஒரு தேசிய இனத்தின் தனித்தன்மையை எடுத்துக் காட்டுவது அதன் கலாச் சாரமே.

உலகின் எந்தவொரு பாகத்திலும், தமிழன் என்ற சொல்லுக்கு தனியான மதிப்பொன்றைக் கொடுப்பதில் எமது பண்பாட்டிற்கும், கலாச் சாரத்திற்கும் பெரும் பங்குண்டு என்பது நாம் அறிந்ததே.

அந்தளவிற்கு எம் இனத்திற்கேயுரிய தனித்துவமான பண்பாடும் கலாச்சாரமும் எம்மக்களின் வாழ்வோடு பின்னிப்பிணைந்துள்ளன.

இன்று.... ஒரு புரட்சிகர சமுதாயத்தை அமைப்பதற்காக நாம் போராடிக் கொண்டிருக்கிறோம். எம்மை பிணைத்திருக்கும் அடிமைத் தளைகளை உடைத்தெறிந்து, தமிழ்த் தேசிய இனத்தின் உரிமைகளைப் பெற்றெடுப்பதற்காகவும், தாயகத்தின் விடுதலையை வென்றெடுப்பதற்காகவும் போராடிக் கொண்டிருக்கும் இவ்வேளையில் எம் இனத்திற்கே உரிய கலாச்சாரத்தை நாம் ஒதுக்கி வைத்துவிட்டு ஒரு புரட்சிகர சமுதாயத்தை உருவாக்க முடியாது.

ஆனால் இன்று, எமது போராட்டத்தை கொச்சைப்படுத்தி, எம் மக்களின் விடுதலையை பின் தள்ளும் வகையில் பல்வேறு வடிவங்களில் கலாசார சீர்கேடுகள் எமது சமுதாயத்தில் ஊடுருவியுள்ளன.

இந்திய - புலிகள் யுத்தத்திற்கிடைப் பட்ட காலப்பகுதியில் வளர்ச்சியடைந்த இச்சமுதாய சீரழிவு நடவடிக்கைகள் எம்மக்களின் போராட்ட சிந்தனைகளை மழுங்கடிக்க செய்யும் நோக்குடன் இந்திய அரசினாலும், அதன் கைக்கூலிகளாகத் திகழ்ந்த தேசவிரோதக் குழுக்களினாலுமே திட்டமிட்டு வளர்க்கப்பட்டுள்ளன.

இந்திய இராணுவமும், அதன் கைக் கூலிகளும் அடித்து விரட்டப்பட்டபின், பாழடைந்து போயுள்ள எமது தேசத்தின் புனருத்தாரணத்தில் ஈடுபட்டுள்ள இன்றைய காலப்பகுதியில் இச்சீரழிவு நடவடிக்கைகளால் சிதைந்து போயுள்ள எமது சமுதாயத்தை எண்ணி வேதனையுறாமல் இருக்க முடியாது.

போதைவஸ்து கடத்தல், அதன் பாவனை என்பன அதிகரித்துள்ள காரணத்தால் யாழ் குடாநாட்டில் மட்டும் 199 மாணவர்கள் நரம்பியல் நோயால் பாதிப்படைந்துள்ளதாக தெரியவந்துள்ளது. இது மட்டுமல்லாது நீலப்படங்களும், பாலியல் உறவு பற்றிய புத்தகங்களும் பாடசாலை மாணவர்களிடையே புகுத்தப்பட்டுள்ளன. இன்று இவை முற்றாக தடை செய்யப்பட்டுள்ள போதிலும் இத்தகைய தீயபழக்கங்கள், சிந்தனைகளின் விளைவினால் எதிர்காலத்தை கட்டியெழுப்ப வேண்டிய இளம் தலைமுறையை எம்தேசம் இழக்கக் கூடிய அபாயம் தோன்றியுள்ளது.

நீலப்படங்கள், பாலியல் உறவு சம்பந்தமான புத்தகங்கள் என்பவற்றை நாம் முற்றாக தடைசெய்ததனால் அதிருப்தி அடைந்துள்ள சில வக்கிர புத்தியுள்ளவர்களின் முணுமுணுப்புகள் எம் காதுகளுக்கும் எட்டியுள்ளன.

'மேலைத் தேசத்தில் பாடசாலைகளில் கூட பாலியல் கல்வி சம்பந்தமான வகுப்புகள் நடத்தப்படும் போது இவர்கள் மட்டும் இங்கு இதைத் தடைசெய்து எதனைச் சாதிக்கப் போகிறார்கள்' என்று குமுறும் மேலைத்தேய கலாச்சாரத்தினுள் மூழ்கிப் போன இவர்கள், தாம் வேலை செய்யும் இடங்களிலேயே இத்தகைய விமர்சனங்களைத் தெரிவித்து வருகின்றனர். குடும்பத்துடன் உட்கார்ந்து நீலப்படம் பார்க்க விரும்பும் இவர்கள் எம் தேசத்தை சீரழிப்பதை நாம் அனுமதிக்க முடியாது. இவர்களுக்கு நாம் தெரிவிக்கும் திட்டவட்டமான பதில் இப்படியான சீரழிந்த வாழ்க்

கையை வாழ விரும்புபவர்கள் மேலைத் தேய கலாச்சாரமே உயர்ந்ததென சிலாகிப் பவர்கள் மேலைத்தேயம் சென்று நிரந்தர மாக அங்கு தங்கி இப்படியான வாழ்க்கை வாழ்வதையிட்டு எமக்கு எதுவித ஆட்சே பனையும் இல்லை என்பதுதான்.

நீலப்படம், பாலியல் உறவுகள் சம்பந் தமான புத்தகங்கள் என்பனவற்றின் புழக் கமும், மேலைத்தேய பாணியில் நடை பெறும் கேளிக்கை விழாக்களும் இன்று இம் மண்ணில் தவறான பாலியல் உறவுகளை தோற்றுவித்துள்ளன. இதன் விளைவாக நூற்றுக்கணக்கில் பெண்கள் ஏமாற்றப்பட் டுள்ளனர் என்பதை எமக்கு வரும் புகார் கள் தெரிவிக்கின்றன. ஒரு பெண் ஏமாற் றப்படும் சம்பவத்தில் பெண்ணிற்கும் சம பங்குண்டு என்று கூறும் அதே நேரத்தில் வேறொன்றையும் நாம் குறிப்பிடவேண்டும். பெண் என்பவள் வெளியுலகம் தெரியாது வீடுகளினுள்ளேயே பொத்திப் பொத்தி வளர்க்கப்படுவதால் ஒரு பரந்து பட்ட அறிவைப் பெற்றிராத காரணத்தாலும் பொருளாதார ரீதியில் ஒரு ஆணை சார்ந்து நிற்க வேண்டியுள்ளமையாலுமே மேற் குறிப்பிட்டுள்ள ஏமாற்றல் சம்பவங்கள் நிகழ்வதை எமக்கு விசாரணைகள் உறுதி செய்துள்ளன.

இத்துடன் போதைவஸ்து, கசிப்புப் பாவனைகளும் இணைந்து கொள்வதால் சுமுகமான குடும்ப உறவுகள் கூட குலைக் கப்பட்டு குடும்பங்களுக்கிடையில் அடிக்கடி சண்டை சச்சரவுகள், பூசல்கள் இடம் பெறுகின்றன. தாய் தந்தையர் சுமுகமான மனநிலையில் இல்லாது எந்நேரமும் சச்சர விடும் காரணத்தால் எத்தனையோ இளம் சிறார்கள் உளவியல்ரீதியில் பாதிப்படைந்த நிலைக்கு உள்ளாகின்றார்கள். இந்நிலையா னது அவர்கள் வளர்ந்து பெரியவர்களாகும் போது அவர்களையும் தவறான வழியில் இட்டுச் செல்லும் நிலையை உருவாக்கக் கூடும்.

தெருக்களில், தனியார் கல்வி நிலை யங்களில் இளம் பெண், ஆண்களிடையே பரிமாறப்படும் கேலிப் பேச்சுக்கள், கிண்டல் கள், சேட்டைகள் என்பனவும் எம் சமுதா யத்தினுள் ஊடுருவியுள்ள கலாச்சார சீரழி வின் விளைவே. கடந்த இரண்டரை கால இடைவெளியில்... உழைப்பதற்காக காணி பூமியை விற்று தம் மனைவி பிள்ளைகளை இங்கு விட்டுவிட்டு வெளிநாடு சென்ற கணவன்மார் பலர் குடும்பத்தினருடன் எந்த வித பிரச்சனையும் இல்லாமலே குடும்பத் தொடர்பை உதறிவிட்டு வெளிநாட்டில் மணம் புரிந்த சம்பவங்களும், உள்ளூரிலேயே 2ம், 3ம் திருமணம் செய்து உல்லாசமாய் வாழ, மனைவியும் குழந்தைகளும் நடுத் தெருவில் நிற்கும் சம்பவங்களும் மலிந்துள் ளன. இக்கால இடைவெளியில்தான் ஒருவன் ஒன்றன்பின் ஒன்றாக 16 திருமணம் செய்த சம்பவமும் இடம்பெற்றுள்ளது. தாம் ஏமாற் றப்படுகிறோம் என்பதை அறியாமலே அந்த 16 பெண்களும் ஏமாற்றப்பட்டுள்ளனர்.

இப்படி ஏமாற்றப்பட்டதன்பின் சமுதா யம் இவர்களை ஒதுக்கி வைப்பதன் விளை வாக ஏமாற்றப்பட்டவர்கள் தவறான வழி களில் ஈடுபடுகின்றனர். இதனால் சமுதா யத்தின் ஒழுக்க விதிகள் புறக்கணிக்கப்படு வதுடன் பாலியல் சம்பந்தமான நோய்கள் பரவும் அபாயமும் தோன்றியுள்ளது.

எம் பண்பாடு, கலாச்சாரத்தை சிதற டித்து, எம் மக்களின் சிந்தனையை திசை திருப்பும் வகையில், எமது தாயகப் பிரதே சத்தில் சிறிலங்கா அரசின் அனுசரணை யுடன் நடாத்தப்படவிருந்து எம்மால் தடை செய்யப்பட்ட அழகுராணிப் போட்டியும் இத்தகையதோர் மனோபாவத்தின் விளைவே. இது எமது போராட்டத்தை திசை திருப்பும் நிகழ்ச்சியாக மட்டுமல்லாது இதுவரை காலமும் ஆணாதிக்க சமுதாயத் தினால் அடக்கு முறைக்கு உள்ளாக்கப்படு கின்றோம் என்று தெரியாமலே அடக்கப் பட்டுக் கொண்டிருந்த பெண்ணினம், தாம் அடக்கப்படுவதை உணர்ந்து உரிமைக்குரல் கொடுக்கும் நேரத்தில் பெண்ணின விடு தலையையும் பின் தள்ளும் வகையிலமைந்த ஓர் சம்பவமுமாகும்.

எம் இனத்தின் உரிமைக்கான போராட் டம் ஒரு புறத்தில் நிகழ்ந்து கொண்டிருக்க, எம் தேசத்தில் புகுத்தப்பட்டு எம் இன விரோதிகளினால் திட்டமிட்ட ரீதியில் வளர்க்கப்பட்ட இவ்வாறான ஒழுக்கக்

கேடுகளின் விளைவாக எம் தேசம் ஒரு பாரிய பாதிப்பை எதிர்நோக்கியுள்ளது.

இன அழிப்பு நடவடிக்கைகள், திட்டமிட்ட குடியேற்றங்கள் இன்னும் தொடர்கின்ற இக்காலகட்டத்தில்கூட தம் பிள்ளை போராட்டத்திற்கும் போய்விடக்கூடாது என்பதில் மிகுந்த அக்கறை காட்டுகின்ற, அதற்காக எதனையும் செய்பத் தயாராக உள்ள ஒரு சில பெற்றோர்களின் மனோ நிலையையும் இங்கு குறிப்பிட்டுக் கூற வேண்டும்.

தம்முடைய பிள்ளை பரீட்சையில் சித்தியடையாது விட்டாலோ தவறான நடவடிக்கைகளில் ஈடுபட்டாலோ கூட கண்டித்தால் போராட்டத்திற்கு போய்விடக் கூடும் என்ற பயத்தில் கண்டிப்பதில்லை. பதிலாக சாளியோ, ரீவியோ எடுத்துக் கொடுத்து அவர்களைத் திருப்திப்படுத்துகின்றனர்.

இதன் விளைவாக நடைபெற்ற சம்பவம் ஒன்று எம்மை அதிர்ச்சியடைய வைத்துள்ளது. 9ம் வகுப்பில் கற்கும் மாணவனொருவனும், மாணவியும் மிக மோசமான நிலையில் நின்று எடுத்த புகைப்படம் ஒன்று அம்மாணவனின் தந்தையிடம் சிக்கியபோது 'அப்பா! அமெரிக்காவில் என்னவெல்லாம் நடக்கிறது தெரியுமா? இந்தச் சின்ன விஷயத்தைப் போய்ப் பெரிசாக் கேட்கிறீர்களே' என்று சாதாரணமாகக் கூறினான்.

எம் தேசம் எங்கே போகின்றது பார்த்தீர்களா? இச்சீர்கேடுகளை இல்லாதொழிக்கும் நடவடிக்கைகளில் நாம் இன்று மும்முரமாக ஈடுபடுபட்டுள்ளோம். தொடர்ந்தும் இச்சீர்கேடுகளில் ஈடுபடுபவர்கள், ஊக்குவிப்பவர்கள் கடுமையாக தண்டிக்கப்படுவார்கள் என்பதில் உறுதியாயுள்ளோம். அதேநேரத்தில் இச்சீரழிவு நடவடிக்கைகளில் ஈடுபடுபவர்களை அனைத்து மக்களும் தூக்கியெறிய வேண்டும். அனைத்து மக்களும் ஒன்றிணைந்து இச்சீரழிவு நடவடிக்கைகளுக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடும் போதுதான் நாம் ஒரு புரட்சிகர சமுதாயத்தை கட்டியெழுப்ப முடியும். கலாச்சாரச் சீர்கேடுகள் அற்ற ஒரு உன்னத சமுதாயத்தை அமைப்பதில் நாம் அனைவரும் ஒன்றுபட்டு உழைப்போம். வெற்றி நிச்சயம்.



எமது படையணி கடக்க வேண்டியது
நெருப்பாறென்பது எமக்குத் தெரியும்
ஆனால்............
அதைத் தாங்கக் கூடிய
மக்கள் ஆதரவு என்னும் கவசம்
எம்மிடம் உண்டு!

வே. பிரபாகரன்

# குருதி நனைத்த மண்ணினின்றும்....



லெப். நித்திலா
(பவானி கம்பர்மலை)
வீர உதயம்: 06 - 02 - 1966
வீர மரணம்: 26 - 06 - 1989



மீ லெப். ஆனந்தி
(காமாட்சி அம்மா)
வீர உதயம்: 02 - 01 - 1969
வீர மரணம்: 04 - 07 - 1988



ராதை
(விக்னேஸ்வரி)
வீர உதயம்: 24 - 04 - 1966
வீரமரணம்: 03 - 07 - 1988



லெப். மரியா
(புவனேந்திரசோதி)
வீர உதயம்: 05 - 09 - 1965
வீர மரணம்: 03 - 07 - 1988

அந்நிய தேசத்தின் ஆக்கிரமிப்பு படை எமது பூமியில் அனர்த்தங்கள், அழிவுகள் செய்திடும் போது உங்கள் விழிகளுக்குள் நெருப்புக் கோளங்கள் இதயத்தில் கனன்றதோ எரிமலையின் புறப்பாடுகள். அடர்ந்த காடுகள், கடுங்

குளிர் கனக்கும் இரவுகள், பாதங்களை வருத்திய கொடிய முட்கள்,...... இப்படி இப்படி எத்தனையோ கஷ்டங்களை பொறுமையுடன் சகித்து போரிட்டு எதிரி யைத் துரத்த எத்துணை ஆர்வம் காட்டினீர்கள். அன்னியன் பாதம் எம் மண்ணில் பதிந்து தனது ஆதிக்க விரல்களால் எம்மக்களைக் கீறிக்கிழித்த போது குமுறிய உங்கள் இதயங்கள் ' கொன்றொழிப்போம் எதிரியை, மண் மீட்போம் உறுதியாய் ' என்று யுத்த கீதம்பாடி களத்தில் புகுந்து எதிரிக்குச் சவாலாகி, ஈற்றில் எம் இலட்சியம் வென்றிட உங்கள் உயிர்ப்பூக்களை எம்மண் ணுக்கு உரமாக்கினீர்கள். எமதும் உமதும் இதயங்களின் ராகம் சுதந்திர தமிழீழ தேசியகீதம் பாடிட வேண்டும் என்பதுதானே. சுதந்திரம் எங்கள் தேசம் காணும் வரை எம் விழிகளுக்குள் நிம்மதி துயில் கொள்ளாது. இந்திய ஆக்கிரமிப்புப் படைக்கு எதிரான தாக்குதல்களில் 26-06-89ல் பன்றிக் கெய்த குளத்தில் வீரமரணமெய்திய லெப். நித்திலாவுக்கும், அளம்பிலில் 03-07-88ல் உயிர் நீத்த ராதை, 04-07-88ல் உயிர்த்தியாகம் புரிந்த 2ம் லெப். ஆனந்திக் கும், விசுவமடுவில் 03-07-88ல் களப்பலியான லெப். மரியாவுக்கும் எங்கள் வீரவணக்கத்தைச் செலுத்துகின்றோம்.



கஷ்டமான வாழ்க்கைக்கு ஆளானவர்கள் அனைவரும் அடக்கு முறையாலும், தேவையாலும், அலைக்கழிக்கப்பட்டு நைந்துபோன மக்கள் அனைவரும் பணக் காரர்களாலும், பணக்காரரின் கைக்கூலிகளாலும் தரையோடு தரையாய் நசுக்கப் பட்டுக்கிடக்கும் மக்கள் அனைவரும் மக்களின் நலத்திற்காக படுமோசமான சித்திரவதைக்கு ஆளாகி, சிறைக்குள்ளே கிடந்து அழிந்துகொண்டிருக்கும் அந்த மக்களோடு ஒன்று சேரவேண்டும். தங்களைப்பற்றிய எண்ணம் ஒரு சிறிது கூட இல்லாமல் அவர்கள் சகல மக்களுக்கும் சுபீட்சப் பாதையைக் காட்டுகிறார்கள் அவர்கள் எந்தவித ஒளிவு மறைவுமில்லாமல், இந்தப் பாதையில் வரும்படி எவரை யும் அவர்கள் நிர்ப்பந்திப்பதில்லை. ஆனால் ஒரு மனிதன் அவர்களோடு போய்ச் சேர்ந்துகொண்டால் அவனே அவர்களை விட்டு பிரிந்து செல்லமாட்டான். 'ஏனெனில் அதுவே சரியான பாதை என்பதையும், அதைத்தவிர வேறு மார்க்கமே கிடையாது என்பதையும் அவன் கண்டுகொள்வான்'. ''அம்மாதிரி மனிதர்களோடு சேர்ந்து செல்வதைப் பற்றிச் சாதாரண மக்கள் கவலைப்படவே தேவையில்லை. அந்த மனிதர்கள் அற்ப சொற்ப வெற்றியோடு திருப்தியடைய மாட்டார்கள். சகல ஏமாற்றுக்களையும், சகல பேராசைகளையும் சகல தீமைகளையும் ஒழித்துக் கட்டினாலன்றி அவர்கள் நிறுத்த மாட்டார்கள். அனைத்து மக்களும் ஒன் றாகச் சேர்ந்து ஒரே குரலில், 'நான் தான் அதிகாரி. நான் தான் சகல மக்களுக்கும் சமமான பொதுவான சட்ட திட்டங்களை உண்டாக்குவேன்' என்ற கோஷத்தை கிளப்புகிற வரையிலும், அவர்கள் ஓய்வுகொள்ள மாட்டார்கள்.

மக்ஸீம் கார்க்கி
'தாய்' நாவலிலிருந்து

# உங்களுடன் . . .



போகின்றேன்
களம் நோக்கி . . .
சில வேளைகளில் . . .
என் மூச்சுக்களும்
சுட்டுப் பொசுக்கும்
சிவந்த கண்களும்
சிதறி வெடிக்கும்
உடைகளும்
என்
இறுதி வார்த்தைகளும்
உங்களுக்கு கிடைக்காமல்
போகலாம்
ஆனால் நாளை . . .
சுதந்திரத்தின் பிரசவிப்பில்
உங்கள் முற்றத்தில்
மலராய்
நான் மலர்வேன்.



